# பொருளடக்கம்

# 'புள்ளி' சுப்புடு

ஆந்திரா நெய் வியாபாரியைப்போல் சட்டைப்பையில் திணிக்கப்பட்ட ஒரு சிறு கணக்கு நோட்டுப் புத்தகம், அத்துடன் இரண்டு பவுண்டன் பேனுக்கள், ஒன்றில் சிவப்பு மசி, இன்னொன்றில் நீல மசி. தெரிந்தவர்களுடைய டெலிபோன் நம்பர்கள், விலாசங்கள்—இன்னும் என்னென்னவோ புள்ளி விவரங்களெல்லாம் அந்த நோட்டுப் புத்தகத்தில் அடங்கியிருக்கும்.

அந்தக் கணக்கு நோட்டுக்குரியவர் யார் தெரியுமா? சர்க்கார் ஸ்டாடிஸ்டிகல் டிபார்ட்மெண்டில், கடந்த முப்பது வருட காலம் உத்தியோகம் பார்த்து ரிடையராகியுள்ள திருவாளர் 'புள்ளி' சுப்புடுதான்.

புள்ளி சுப்புடு தெருவில் நடக்கும்போது சும்மாப் போக மாட்டார். ஏதாவது ஒரு கணக்கை விரல் விட்டு எண்ணிக் கொண்டேதான் போவார்!

சுபாஷ் போஸ் மாயமாக மறைந்த தேதி, வைஸ்ராய் வேவலின் சிராத்த தினம், நைல் நதியின் நீளம், இமயமலையின் உயரம்; பரங்கிமலையின் சுற்றளவு; குதிரைப் பந்தயத்தில் டிரிபிள் ஈவெண்டில் முதலாவதாக வந்த குதிரைகளின் நாமதேயங்கள்; அவ்வான் அணைக்கட்டுக்கு ஆகும் செலவு; முதன்முதலாக வெளிவந்த தமிழ் டாக்கியின் நீளம், கோட்டைக்கு அருகில் ஜப்பான்காரன் குண்டு போட்ட தேதி—

இவ்வளவையும் அவர் ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருப் பார்.

புள்ளி சுப்புடு யாருடனாவது பேச ஆரம்பித்துவிட் டாலோ புள்ளி விவரங்கள் அலைமோதிக்கொண்டு வரும். அவர் தெருவில் போகும்போது, தெரிந்தவர்கள் யாராவது எதிரே வந்துவிட்டால், போதும்; "யாருடா நீ? சுப்பிரமணி மருமானடா? உன் பேரு வேதாசலம் இல்லேயோ? இனிஷியல் கே. எஸ். தானேடா? 1943 ஏப்ரல் பதினேழிலே நீ பிறந்தே! அப்ப மெட்ராஸிலே ஒரே வெள்ளம்! ஏண்டா, உங்கப்பா ஓர் ஆஸ்டின் கார் வெச்சிண்டிருந்தாரே! அதாண்டா எம். எஸ். பி. 4147. நைன்டீன் தர்ட்டி மாடல்! இப்போ அதை வித்துட்டாரா? காந்திநகர் ஸிக்ஸ்த் கிராஸ் ரோட்லே தானேடா உங்க வீடு? நூற்றுமுப்பத்தெட்டுங் கீழே மூணு இல்லே நம்பர்?

"ஏண்டா, வேலூர் மிஷன் ஆஸ்பத்திரியில் 1952 ஜூன் இருபதாம் தேதி உங்க அத்திம்பேருக்கு அபெண்டிஸிடிஸ் ஆபரேஷன் ஆச்சே? இப்ப பரவாயில்லையா? இப்ப என்னடா செய்யறார் அவர்? அவருக்கு இப்ப வயசு நாற்பத்து நாலு இருக்குமே? 1916ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் பதினாலாம் தேதி பிறந்தார்.

"ஏண்டா, அவருடைய சித்தப்பாபிள்ளை, அதாண்டா கோதண்டராமன் எஸ். எஸ். எல். ஸி. படிச்சிண்டிருந்தானே, இப்ப அவன் என்ன பண்றான்? படிப்பை அதோட நிறுத் திட்டானா? இல்லே, மேலே படிக்கிறானா? 6792 தானேடா எஸ். எஸ். எல். ஸி.யில் அவன் பரீட்சை நம்பர்? சரி; இப்ப எங்கடா போறே?"

"கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ்ஸிலே என் சிநேகிதர் ஒருத்தர் வரார். அவருக்கு மகாபலிபுரம் பார்க்கணுமாம். அவரைக் கூட்டிண்டு வர ஸ்டேஷனுக்குப் போறேன்."

"கிராண்ட் டிரங்கா? அது இன்னைக்கு நாலு மணி இருபது நிமிஷம் லேட்டாம். நான் சென்ட்ரல்லேருந்துதான் வரேன்.

ஏண்டா, உன் சிநேகிதரை எப்படி மகாபலிபுரம் அழைச்சுண்டு போகப்போறே? திருப்போரூர் வழியாப் போடா; ஆறு மைல் ஸேவ் ஆகும். திருக்கழுக்குன்றம் வழியாப்போனுல் நாற்பத்திரண்டு மைல் ஆறது. வீணுச் சுத்தாதே!" என்று தமக்குத் தெரிந்த புள்ளி விவரங்களையெல்லாம் சொல்லி ஆளைத் திணற அடித்துவிடுவார்.

புள்ளி சுப்புடு வெளியில் போகாத நேரங்களில் வீட்டுக்குள் உட்கார்ந்து ஏதேனும் ஜாதக ஆராய்ச்சியிலோ, வேறு கணக்கு ஆராய்ச்சியிலோ தீவிரமாக ஈடுபட்டிருப்பார். அவருக்கு எதிரில் ஜாதகங்கள், குறிப்புகள், ரயில்வே கைடு, பஞ்சாங்கம், சிலேட்டு, பலப்பம் இத்தனையும் இருக்கும்.

கடந்த அறுபது வருடங்களில் நிகழ்ந்த சந்திர கிரகணங்கள் எத்தனை? ஒவ்வொன்றும் எத்தனை மணி, எத்தனை நிமிஷ நேரம் நீடித்தது?—இப்படி எத்தனை எத்தனையோ கணக்குகள், ஆராய்ச்சிகள்!

"யாருடா, சாமிநாதனு?...வாடா, வா. இப்ப எங்கேடா உத்தியோகம்? எல். ஐ. சி.யிலா? அந்தப் பதிமூனு அடுக்கு மாடியிலா? நீ எத்தனுவது மாடி? ஏண்டா அந்தக் கட்டடத்துக்கு ஒரு கோடியே சொச்சம் ரூபாய் செலவுன்னு கணக்குச் சொல்றுளே, பிகர் கரெக்டாயிருக்குமோ? எண்பத்தெட்டு லட்சத்து எழுபத்தேழாயிரத்து நானூற்று முப்பத்தெட்டு ரூபாய் அறுபத்தேழு பைசான்னு எனக்கு ஞாபகம் போகட்டும்; நமக்கென்ன?

"நீ இன்னிக்குப் பேப்பரைப் பார்த்தயோ? மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலே விவசாயத்துக்கு எண்ணூறு கோடி ரூபாய் சாங்ஷன் செய்யணும்னு திட்டக்கமிஷனைக் கேட்டிருக்காளாம். அதுவே போதாதாம்! ஆமாம்; அது எப்படிப் போதும்? பாபுலேஷன் நாளுக்கு நாள் அதிகமாயிண்டு இருக்கோன்னே?

"நல்லவேளை! இந்தச் சங்கடத்துக்கெல்லாம் இல்லாமல் நான் தப்பிச்சு வந்துட்டேன்.

"என்னை இன்னும் இரண்டு வருஷம் உத்தியோகம் பார்க்கச் சொல்லி எங்க ஆபீசர் கெஞ்சினுன். நான் கண்டிப்பா முடியாதுன்னுட்டேன். கூட்டல்கூடச் சரியாப் போடத் தெரியாதவன்களையெல்லாம் ஸீனியர் ஆபீசராகக் கொண்டுவந்து போட்டுட்டு நம்ப கழுத்தை அறுக்கிறுன்க! யார் இவனுடெல்லாம் மாரடிக்கிறது? எனக்கென்ன? இருக் கிறது ஒரு பெண்ணு; ஒரு பிள்ளை. பெண்ணுக்கு இருபத் திரண்டு வயசு; கலியாணம் ஆயிடுத்து. பத்தாயிரம் வரைக் கும் செலவு செய்தேன். மாப்பிள்ளைக்கு மூவாயிரம் வரதட்சணை கொடுத்தேன். அப்ப பவுன் விலை இப்படியா இருந்தது? அறுபத்தேழு ரூபாய்! ஒசந்தால் அறுபத்தெட்டு ரூபாய்! அவ்வளவுதானே?

"பிள்ளைக்கு இருபது வயசு ஆறது; பி. காம். படிக்கிறுன். அடுத்த வருஷத்தோடு அவன் படிப்பு முடிஞ்சுடறது. மாப் பிள்ளைதான் ஹைகோர்ட்டிலே பெஞ்ச் கிளார்க்காயிருக்கான். உனக்குத் தெரியுமோ, ஹைகோர்ட்டுக்கு எப்ப அஸ்திவாரம் போட்டான்னு? எய்ட்டீன் ஸெவன்டி ஒன். இப்பவும் கட்டடம் எப்படி இருக்கு, பார்த்தாயா? ஒவ்வொரு செங்கல்லும் எண்ணிக்கோ எண்ணிக்கோங்கறது!

"உங்க எல். ஐ. சி யும் இருக்கே? ஏண்டா, அது என்னடா அது? கட்டடம் பூராவும் ஒரே கண்ணாடி ஜன்னலா வெச்சுட் டான்? மொத்தம் இருநூற்று ஐம்பத்தாறு ஜன்னலோ என்னவோ இருக்குடா. அவ்வளவும் பெல்ஜியம் கிளாஸாத் தான் இருக்கணும். கண்ணாடிக்கே அறுபத்தேழாயிரத்து எழு நூற்று..."

இப்போது சுப்புடு வானத்து நட்சத்திரங்களைக் கணக்கெ டுத்துக் கொண்டிருக்கிறுர். கூடிய விரைவில் மொத்த நட்சத் திரங்கள் எத்தனை என்பதைச் சொல்லி விடுவார்!

# 'அவுட்' அண்ணுஜி

நேர்வகிடு, நெற்றியில் ஜவ்வாதுப் பொட்டு, கையிலே தோல் பை, கலகலப்பான குரல்—இவை யாவும் அவுட் அண்ணுஜிக்கே உரிய அம்சங்கள்.

இந்த உலகத்தில் அண்ணுஜிக்குத் தெரியாத ஆசாமிகளே கிடையாது.

முன்பின் தெரியாதவர்களிடத்திலேகூட ரொம்ப நாள் பழக்கப்பட்டவனைப் போல் பேச ஆரம்பித்து விடுவான்.

அவுட் வாணம் உதிர்வது போல் 'சளசள'வென்று பேசிக்கொண்டே இருப்பான். ஆனாலும் அவன் பேச்சிலே ஒரு சுவாரசியம் இருக்கும்.

"எங்கேடா, அண்ணுஜி! உன்னைக் கொஞ்ச நாளாய்க் காணும்?" என்று யாராவது கேட்டுவிட்டால் போதும். புருடாக்களும், கப்சாக்களுமாய் உதிர்த்துத் தள்ளிவிடுவான். தன்னுடைய பொய்களைக் கேட்பவர்கள் நம்புவார்களா என்பதைப் பற்றி அவன் கவலைப்படுவதில்லை.

"நேற்றுதான் டில்லியிலிருந்து திரும்பி வந்தேன். போன இடத்தில் ஒருவாரம் 'டிலே' ஆகிவிட்டது. இப்போதுதான் ப்ளே'னில் மீனம்பாக்கம் வந்து இறங்கினேன். டாம் அண்டு டிக் கம்பெனி புரொப்ரைட்டரும் என்னோடுதான் விமானத்தில் வந்தார். அவர் காரிலேயே என்னையும் அழைத்து வந்து

விட்டார்!" என்று தன்னுடைய பிரதாபங்களை அவிழ்த்து விடுவான்.

அண்ணாஜியைத் தெரியாத பேர்வழிகளாயிருந்தால் அவன் போடுகிற போட்டைக் கண்டு அசந்து போவார்கள். 'ரொம்ப செல்வாக்கு உள்ளவன்போல் இருக்கிறது!' என்றும் எண்ணிக் கொள்வார்கள். அண்ணாஜி சமாசாரம் அவர்களுக்கு என்ன தெரியும்!

"டில்லியிலே ஏன் டிலே?" என்று நாம் அவனைக் கேட்க வேண்டியதில்லை; அவனாகவே சொல்வான்:

"டிபன்ஸ் மினிஸ்டர் வி. கே. மேனன் என் கிளாஸ் மேட்டாச்சே. தற்செயலா என்னைப் பார்த்துவிட்டார். 'ஹலோ அண்ணாஜி! எங்கே கவனிக்காமலே போறே? வா பங்களாவுக்கு!' என்றார். அவரோ ஓல்ட் பிரண்ட்; டிபன்ஸ் மினிஸ்டர் வேறே. எப்படித் தட்டறது; சரின்னு அவரோட போனேன். டீ கொடுத்தார். மேனன் ஆச்சே! எனக்கு டீ பிடிக்காது. என்ன செய்யறது! குடிச்சு வைத்தேன்."

"வந்தது வந்தே, என்னோடு கெய்ரோவுக்கு வறயா, நாசரைப் பார்த்துவிட்டு வரலாம்னார். எனக்கும் நாசர் கிட்டே கொஞ்சம் வேலை இருந்தது. சரின்னு புறப் பட்டேன்."

"நாசர்கிட்டே உனக்கென்ன வேலை?"

"ஒரு பிஸினஸ் விஷயமாகத்தான். நாசரிடம் அஸ்வான் டாம் காண்டிராக்ட் கேட்டிருந்தேன். 'சூயஸ் தகராறு தீரட்டும்; அப்புறம் சொல்றேன்'னு சொல்லியிருந்தாரு. கெய்ரோவுக்குப் போய்விட்டு இண்டியாவுக்குத் திரும்பினேன். பம்பாயில் இறங்கி டெஸ்ட் மாட்சைப் பார்த்து விட்டுக் கார் ஏறப்போறேன். கிரிக்கெட் பிளேயர் கண்டிராக்டர் இல்லே கண்டிராக்டர்—அவன் என்னைப் பார்த்துட்டான். 'செஞ்சுரி போட்டேனே, பார்த்தாயா அண்ணாஜி?'ன்னான். கையைப் பிடிச்சுக் குலுக்கினான். 'பிளேன்லே ஏதோ

அகாமடேஷன் தகராறு; கொஞ்சம் இடம் பிடிச்சுக் கொடுக்க முடியுமா?'ன்னான். 'சரி'ன்னு ஏர்-இண்டியாவுக்கு டெலிபோன் பண்ணினேன். என்குயரி கர்ல் மிஸ் கல்பனா தன்னுடைய ஸ்வீட் வாய்ஸ்லே 'என்ன வேண்டும்?'னா. 'நான்தான் அண்ணாஜி'ன்னேன். அவ்வளவுதான் 'ஹலோ! அண்ணாஜியா? உங்க லெதர்பாக் இங்கேயிருக்குது. மறந்து வெச்சுட்டுப் போயிட்டீங்க. வந்து வாங்கிட்டுப் போங்கோ'ன்னா. உடனே காரில் புறப்பட்டுப் போய் அந்தச் சிந்தி கர்ல்கிட்டே பையை வாங்கிண்டேன். என் பிசினஸ்லே அதில்தானே இருக்குது?"

"அண்ணாஜி! நீங்க ஒரு 'மொபைல் மல்டிபிளெட் பிஸினஸ் இன்ஸ்டிட்யூஷன்'ன்னு அவ எனக்கு ஓர் அட்சதையைப் போட்டாள். கிறிஸ்மஸ் பிரசண்டுக்குத்தான் அடிபோடறாங்கிறது எனக்குப் புரியாதா? சாக்லெட் டின்னை வாங்கிப் போட்டுட்டு, கண்டிராக்டருக்கும் ஒரு ஸீட் புக் பண்ணிக் கொடுத்துட்டு வந்தேன்!"

அண்ணாஜி இப்படி அளந்துகொண்டேயிருப்பான். திடீரென்று ஏதாவது ஒரு காரில் தொத்திக்கொண்டு போய் விடுவான். மறுபடியும் ஒரு மாதமோ இரண்டு மாதமோ கழித்துத்தான் மீண்டும் தென்படுவான்.

அவனுக்கு எப்போதும் ஒரே அவசரந்தான். இறக்கை கட்டிக்கொண்டு பறந்தபடியே இருப்பான். இன்றைக்கு ஓர் இடத்தில் 'ஓபனிங் செரிமனி' என்பான். நாளைக்கு ஓர் இடத்தில் மூடுவிழா என்பான்.

பம்பாய், கல்கத்தா, டில்லி, லண்டன், சௌத் ஆப்பிரிக்கா எல்லா இடங்களிலும் தனக்குப் பிஸினஸ் இருப்பதாகவும், எல்லா இடங்களிலும் எல்லாரையும் தெரியும் என்றும் சொல்வான். எல்லாம் ஒரே ஹம்பக்!

எல்லாருக்கும் புத்தி சொல்வான். எல்லோரும் தன் பேச்சைக் கேட்காமல் கெட்டுப் போனதுபோல அங்கலாய்ப்

பான். புதிய பிஸினஸுக்குப் பல யோசனைகளும் டாகுமெண்டுகளும் ரெடியாக வைத்திருப்பதாகப் பையைத் தூக்கிக் காட்டுவான்.

அப்படி என்ன பிஸினஸ் என்று யாராவது கேட்டால், 'ஆவாரம் தழையிலிருந்து காப்பியைப் போல் ஒரு பானம் தயாரிக்கப் போகிறேன். ஆவாரம் இலையிலிருந்து (Leaf) தயாரிப்பதால் காபிக்குப் போட்டியாக லீம்பி என்று அதற்குப் பெயர் வைக்கப்போகிறேன்'' என்பான்.

''ஒரே தீக்குச்சியில் திருப்பித் திருப்பி நெருப்புண்டாகும் எடர்ன் மாட்ச் ஸ்டிக், ரப்பர் பிளேடு, தேயாத டயர், உருகாத ஐஸ்—இப்படி எத்தனை எத்தனையோ நவீன அதிசயப் பொருள்களெல்லாம் உற்பத்தி செய்யப் போகிறேன். அமெரிக்காவிடம் டாலர் உதவிகேட்டுக் கடிதம் எழுதியிருக்கிறேன். சரக்குகளைத் தயாரித்து உடனே மாதிரிக்கு அனுப்பும்படி இன்றுதான் பதில் கடிதம் வந்திருக்கிறது அமெரிக்கன் எம்பஸியில் என்னை 'இண்டர்வியூ' கேட்டிருக்கிறார்கள். எனக்கோ டயம் இல்லை.''

''ஏன் ரொம்ப பிஸியோ?''

''ஆமாம்; என் மச்சினியின் முதல் குழந்தைக்கு ஆண்டு நிறைவு. அதற்கு நான் அவசியம் இங்கே இருக்கவேண்டும்.

''யார் கூப்பிடறது? போன் காலா! பைனான்ஸ் மினிஸ்டரா? எனக்கா? இதோ வந்துட்டேன். உங்களை அப்புறம் மீட் பண்றேன், ஸார்!''

குட் மார்னிங்!......

# சர்வர் சந்தானம்

சினிமாக் கொட்டகையில் 'இண்டர்வெல்' நேரம். திடீ ரென்று பெஞ்சு வகுப்பிலிருந்து ஒரு சீட்டிச் சத்தம் கேட்டது. ஒரு 'பரட்டைத்தலை' பெஞ்சு மேல் நின்று கொண்டு 'பால் கனி' பக்கமாகத் திரும்பி, "டேய்! அதோ பாருடா, சினிமா ஸ்டார் மிஸ் சந்திரா ராணி..." என்ருன். உடனே, பத்துப் பதினைந்து பேர் மள மள வென்று பெஞ்சு மீது ஏறி நின்று சீட்டியடிக்கத் தொடங்கி விட்டார்கள்.

அத்தனை கும்பலில், அந்த அரை வெளிச்சத்தில் சினிமா ஸ்டார் சந்திரா ராணியைக் கண்டுபிடித்தது வேறு யாருமில்லை; சர்வர் சந்தானந்தான்! ஓட்டலில் வேலை செய்வது தன்னுடைய தலைவிதி என்றும், தனக்கிருக்கும் 'பர்சனலிடி'க் கும், திறமைக்கும் தான் சினிமா வானில் மின்னிக்கொண் டிருக்கவேண்டிய ஒரு பெரிய 'ஸ்டார்' என்றும் அவன் எண் ணிக் கொண்டிருந்தான். "நான் பிறந்த நட்சத்திரம் சரி யில்லை; அதனுல் நான் ஒரு ஸ்டார் ஆகாமல் இங்கே காப்பி ஆற்றிக்கொண்டிருக்கிறேன்!" என்று எல்லோரிடமும் சொல் லுவான்.

அவன் ஆஸ்தியெல்லாம் ஒரு டிரங்குப் பெட்டிதான்; அந் தப் பெட்டிக்குள் ஒரு முகம் பார்க்கும் கண்ணுடி, சீப்பு,சோப்பு, ஷேவிங் செட், பவுடர் டப்பா, சினிமாப் பாட்டுப் புத்தகங் கள்— இவ்வளவும் இடம் பெற்றிருந்தன.

டிரங்குப் பெட்டியைத் திறந்தால் பிரபல சினிமா நட்சத் திரங்களின் வர்ணப் படங்கள் ஒட்டப்பட்டிருக்கும்.

'புஸ்' என்று வளர்ந்து புதர்போல பூத்து நிற்கும் கிராப்பு. சலவையிலிருந்து வந்த மெல்லிய மல்ஜிப்பா. அதற்குள்ளே வலே பனியன். கழுத்தைச் சுற்றிலும் 'டெக்னி கலர் கர்சிப்' தெரியும் ஒன்று. கழுத்திலே மெல்லிய சங்கிலி; நெற்றியிலே பெரிய குங்குமப் பொட்டு.

தினம் 'டியூடி' முடிந்தவுடன் அவசர அவசரமாக அவன் தன்னை ஒருவிதமாக 'மேக்—அப்' செய்துகொண்டு 'நைட்ஷோ' வுக்குக் கிளம்பிவிடுவான்.

யாராவது உப நடிகர்களோ, ஸ்டுடியோக்களில் வேலைசெய் பவர்களோ, அவன் ஓட்டலுக்கு வந்து விட்டால் போதும். சந் தானம் அவர்களை விடவே மாட்டான். "வாங்க அண்ணே' நீங்க, 'பாட்டியே தாத்தாவின் பத்தினி' என்கிற படத்திலே காமெடியனுக நடிச்சிருக்கீங்களே. நான் நேற்றுத்தான் பார்த் தேன்! சொல்றேன்னு கோவிச்சுக்காதீங்க! படம் சுமார்தான். போட்டோகிராபி ரொம்ப மட்டம். ரிகார்டிங்கும் மோசந் தான். படம் உங்களாலேதான் ஓடறது. எனக்குக்கூட சினி மாவிலே ஆக்ட் பண்ணனும்னு ரொம்பநாளா ஆசை. நீங்க மனசு வைத்தால்..." என்று ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரிப்பான்.

செவ்வாய்க்கிழமை யன்றுதான் 'மனோகரா கபே'க்கு வார விடுமுறை. ஆனால் அன்றுதான் சந்தானத்துக்கு வேலை அதிகம்! காலை ஏழு மணிக்கே புறப்பட்டுவிடுவான். கோடம் பாக்கம் ரயில்வே கேட்டுக்கருகே போய் நின்று கொண்டு ஸ்டுடி யோக்களுக்குச் செல்லும் கார்களையும், நட்சத்திரங்களையும் சென்ஸஸ் எடுத்துக்கொண்டிருப்பான். அது முடிந்ததும் தி. நகர், காந்தி நகர், கோபாலபுரம் என்று நட்சத்திரங்கள் வாழும் க்ஷேத்திரங்களுக்கெல்லாம் ஒருமுறை சென்று தரிசித்துவிட்டு வருவான்.

சினிமா நட்சத்திரங்களின் வீட்டு விலாசங்கள், கார் நம்பர் கள் எல்லாம் டயரியில் எழுதி வைத்துக்கொண்டு தன் நண்பர்

களிடம் காது மூக்கு வைத்துக் கதை அளப்பது அவனுடைய பெரிய பொழுதுபோக்கு. "டேய், இன்னிக்கு 'தர்ட்டி சிக்ஸ் எய்ட்டி ஒன்'லே சம்பனு தேவியைப் பார்த்தேண்டா. மேக்கப் போடடே போரு...ஷூட்டிங்குக்குப்போருப் போலேயிருக்குடா" என்பான்.

சினிமாப் பத்திரிகைகளில் கேள்வி – பதில் பகுதியைத் துருவித் துருவிப் படிப்பான். தான் எழுதிப்போட்ட கேள்விக்கு பதில் வந்திருக்கிறதா என்று ஒவ்வொரு பத்திரிகையாக வாங்கி பார்த்து ஏமாந்து போவான்.

ஒரு நாள் அவன் 'டேபிலு'க்கு டிபன் சாப்பிட வந்த ஒருவரைப் பார்த்து. "சார், நீங்க சினிமா ஸ்டார் மோகனு தேவியின் பிரதர்தானே?" என்ருன்.

"என்னை உனக்கு எப்படித் தெரியும், தம்பி?"

"என்னு சார்! இதுகூடவா தெரியாது! வெளியே நிக்குதே சார், ஸ்டூடிபேக்கர்...அவங்க காரு. ஏன் சார்! 'பிளிமத்'தை வித்துட்டாங்களா?...உங்க வீட்டுக் கிருகப்பிரவேசத்துக்குப் பார்ட்டி கொடுத்தீங்களே, அன்னிக்கு நான் வந்திருந்தேன், சார்! எல்லா சினிமா ஸ்டாருங்களையும் பார்த்தேன். பத்மினி, ராகினிகூட வந்திருந்தாங்களே, அன்னிக்குத்தான் எல்லா ஸ்டாரையும் சேர்ந்தாப்போலே பார்த்தேன். எல்லார்கிட்டே யும் ஆட்டோகிராப்கூட வாங்கினேன். பாலையாகூடஎங்கிட்டே பேசினுரே!

"அன்னிக்கு எங்க ஓட்டல்தானே கேட்டரிங். அதுக்கப் புறம் உங்களை வந்து பங்களாவிலே பாக்கவே முடியலீங்க. கூர்க்கா உள்ளேயே விடமாட்டேங்கருன்! ஒண்ணுமில்லே... எனக்கு ஒரு பிக்சர்லே சான்ஸ் வாங்கிக் கொடுக்கணும், சார்! நீங்க மனசு வைத்தால் முடியும்...நான் அமெச்சூர் டிராமாவி லெல்லாம் நடிச்சிருக்கேன். நிறையப் போட்டோகூட எடுத்து வெச்சிருக்கேன்...!"

"ஏம்பா! இந்த சர்வர் வேலை உனக்குப் பிடிக்கலையா, எதுக்கு, சினிமாவிலே சேர்ந்து அவஸ்தைப் படணுங்கிறே?"

"வாழ்க்கையிலே ஒருதடவையாவது ஒரு படத்திலே யாவது நடிக்கணும்னு ஆசையாயிருக்கு, சார்! இதைப் பார்த் தீங்களா? இத்தனை போஸும் என்னுடையதுதான்..." என்று கூறித் தன் மணிபர்ஸிலுள்ள புகைப் படங்களை எடுத்து அவரிடம் காட்டினான்.

"அப்புறம் இன்னொரு விஷயங்க...ஷூட்டிங்கே பார்த்த தில்லே நான். ஒரு நாள் ஏற்பாடு பண்றீங்களா?" என்றான் தலையைச் சொறிந்துகொண்டே. எல்லோரையும் போல அவரும் புன்சிரிப்புச் சிரித்தபடியே, "ஆகட்டும், கவனிக் கிறேன்!" என்று கூறிவிட்டுப் போய்விட்டார்.

சுருட்டை மயிர் இருந்தால் சினிமாவில் சேருவது சுலபம் என்று நினைத்திருந்த அவனுக்கு ஒரு சான்ஸ்கூடக் கிடைக்க வில்லை. தனக்கு ஏற்பட்ட தோல்விகளைக் கண்டு கிராப்பை வேறுவிதமாக வாரிப் பார்த்தான். நாசூக்காக மீசை வைத்துப் பார்த்தான். குங்குமப் பொட்டைச் சிறிதாக்கினான்.

அப்புறந்தான் அவனுக்கு ஒரு ஸ்டுடியோவில் வேலை கிடைத்தது. ஸ்டுடியோ காண்டீனில் சர்வர் வேலைதான். ஆனால், அதற்காக அவன் வருத்தப்படவில்லை. தினமும் ஸ்டுடியோவுக்கு வரும் ஸ்டார்களை நேரில் பார்த்துக்கொண் டிருக்கலாம் அல்லவா?

# அட்டெண்டர் ஆறுமுகம்

“என்ன உத்தியோகம் சார், இது? பத்து வருசமா நானும் அட்டெண்டராத்தான் இருக்கேன்; நீங்களும் ஹெட்கிளார்க் காகவே இருக்கீங்க. சலிச்சுப் போகல்லே? உத்தியோகத்தை ஒசத்திப்போடச் சொல்லுங்க, சார்!” என்பான் அட்டெண்டர் ஆறுமுகம்.

“போடா, தூங்குமூஞ்சி! நீ செய்யற வேலைக்குப் பிரமோஷன் வேறே ஒரு கேடா?” என்பார் ஹெட்கிளார்க்.

“அட, நீங்க ஒண்ணு. எனக்குச் சொல்லலே, சார்! உங்களுக்குத்தான் சொன்னேன்; ஏதோ குழந்தை குட்டிங்களை வெச்சுகிட்டுப் பத்து வருசமா இப்படியே கஷ்டப்பட்டுக்கிட்டிருக்கீங்களேன்னு சொன்னு...”

“ஆமாம், நீ பெரிய குபேரன்; உனக்கு இந்த அட்டெண்டர் வேலையே போதும்.”

“எனக்கெதுக்கு சார்? ஓட்டலுக்குப் பால் சப்ளை பண்றேன். விடியக்காலம் மூணு மணிக்கே எழுந்துபோய் மாட்டைக் கறக்கணும். அதான் கொஞ்சம் தொந்தரவு. சரியாத் தூங்க முடியலே. தூக்கம் கெட்டுப்போவுது.”

“அதான் ஆபீஸ்லே வந்து நிம்மதியாத் தூங்கறயேடா சோம்பேறி!”

"சரி சார், இப்ப எதுக்குக் கூப்பிட்டீங்க?"

"திருவல்லிக்கேணியிலே ஒரு வீடு காலியாயிருக்காம். கொஞ்சம் போய் அதை விசாரிச்சுட்டு வறயா?"

"அந்த வீட்டுக்காரர் இல்லாட்டி...?"

"திரும்பி வந்துடு."

"அதுக்கு ஏன் சார், போவணும்?"

அந்த ஆபீசில் மானேஜர்முதல், சின்ன குமாஸ்தா வரை எல்லோருக்கும் ஆறுமுகந்தான் அட்டெண்டர். காலையில் பத்தரை மணிக்கு ஆபீசுக்கு வருவான். அவனுக்கென்று ஓர் இருட்டறை உண்டு. அங்கே ஆபீஸ் பைல்களெல்லாம் கட்டுக் கட்டாக அடுக்கப்பட்டிருக்கும். அந்த பைல் கட்டுகளுக்கிடையில் ஒரு ஸ்டூலைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்துவிடுவான். யார் மணி அடித்தாலும் வரமாட்டான்.

"ஆறுமுகம், உன்னை எத்தனை தடவை கூப்பிடறது?"

"எதுக்கு சார், கூப்பிட்டீங்க?"

"உடனே போய் திருச்சிக்கு ஒரு பஸ்ட் கிளாஸ் டிக்கெட் வாங்கிட்டு வா, போ!" என்பார் ஹெட்கிளார்க்.

"ஆபீஸ் விஷயமாப் போறீங்களா, சார்?"

"உனக்கெதுக்குடா இந்த அக்கப்போரெல்லாம்? நீ போய் டிக்கெட் வாங்கிட்டு வாயேன்."

"அதுக்குக் கேக்கலே, சார்! உங்க நன்மைக்குத்தான் கேட்டேன். சொந்த டிரிப்பாயிருந்தால் எதுக்கு அவ்வளவு பணம் செலவழிக்கிறீங்க? குழந்தை குட்டிக்காரராச்சே!"

"உன் 'அட்வைஸ்' எனக்கு வேண்டாம். முதல்லே நீ போய் டிக்கெட்டை வாங்கிட்டு வரப்போறயா, இல்லையா?"

"அதான் சொல்லிட்டீங்களே, செஞ்சுடப்போறேனே?"

"பின்னே ஏன் நிக்கறே?"

"இல்லே, பயணத்தை அடுத்த மாசம் தள்ளிப்போடக் கூடாதான்னு தெரிஞ்சுக்கத்தான்!"

"ஏன் அடுத்த மாசம் போறதிலே உனக்கென்ன லாபம்?"

"அடுத்த மாசம் நான் பதினேஞ்சு நாள் லீவு எடுத்துக்கப் போறேன். அந்தச் சமயத்திலே நீங்களும் லீவு எடுத்துக்கலாமேன்னு சொன்னேன். ஆபீசிலே நான் இல்லாட்டா உங்களுக்குக் கை ஒடிஞ்ச மாதிரி இருக்குமே...!"

"இவர் பெரிய இவரு! கூப்பிட்ட குரலுக்கு வந்துடுவாரு பாரு. சரித்தான் போடா!"

"ஏன் சார், இன்னேக்கே போகப் போறீங்களா?"

"ஆமாம்; எதுக்குடா?"

"எனக்குத் தெரிந்த லாரி ஒண்ணு நாளேக்கு ராத்திரி புறப்படுது. தாம்பரம் டேசனண்டே வந்து நில்லு, சார்! நான் அந்த லாரியிலேயே வந்து உங்களே ஏத்தி விட்டுடறேன். லாரி டிரைவர்கிட்டே அஞ்சு ருபா கொடுத்தாப் போதும் சார்! ஏதோ குழந்தை குட்டிக்காரராச்சேன்னு சொன்னேன். கேட்டாக் கேளுங்க; விட்டா விடுங்க!"

"போடா, உன் அட்வைஸும் நீயும், அதிகப் பிரசங்கி!"

"ஏன் சார், திருப்பி வரப்போ தஞ்சாவூர் வழியாத்தானே வருவீங்க?"

"எதுக்குடா?"

"தஞ்சாவூர்லே குடமுளகா சீப்பு, சார்! ஒரு மணங்கு புடிச்சிகிட்டு வாங்களேன். மோர் முளகாப் போட்டு வெச்சா ஒரு வருசத்துக்கு ஒதைச்சுக்கிட்டிருக்கும். ஏதோ குழந்தை குட்டிக்காரராச்சேன்னு சொன்னேன்!"

யார் எந்த வேலே சொன்னலும் ஆறுமுகம் உடனே புறப் பட்டுவிட மாட்டான். 'அது அவசியந்தானு? அவசரந்தானு?

என்று குறுக்குக் கேள்விகளெல்லாம் கேட்டு வேலை சொல்பவர்களைத் திணற அடிப்பான். காலையில் தண்டையார்ப்பேட்டைக்குப் போய்வர வேண்டும் என்று யாராவது சொன்னால் மாலையில்தான் கிளம்புவான். ஆபீசில் உள்ள அத்தனை பேர்களிடமும் போய், "அக்கௌண்டண்ட் ஒரு வேலையா என்னைத் தண்டையார்ப்பேட்டைக்கு அனுப்பறாரு. இன்னும் யாருக்காவது தண்டையார்ப்பேட்டையில் வேலை இருந்தால் சொல்லுங்கள்; ஒரே அடியா முடிச்சுக்கிட்டு வந்துடறேன்" என்று தண்டோரா போடுவான்.

கடைசியில் மாலையிலும் போகமாட்டான். கேட்டால் 'சைக்கிள் பஞ்சர்; பஸ் ஸ்டிரைக்' என்று ஏதாவது சாக்குச் சொல்லிவிட்டு, பைல் அறையில் போய் நிம்மதியாகத் தூங்கிக்கொண்டிருப்பான்.

"ஏண்டா, ஆறுமுகம்! உன்னை எங்கேடா நாலு நாளாய்க் காணோம்?" என்பார் அக்கௌண்டண்ட்.

"லீவு போட்டிருந்தேனே, சார்! தெரியாது உங்களுக்கு?"

"லீவு போட்டால் சொல்லிட்டுப் போறதில்லையா?"

"உங்களை வந்து பார்த்தேன், சார்! நீங்க மேஜைமேலே சாஞ்சபடியே லேசாத் தூங்கிக்கிட்டிருந்தீங்க. சரிதான் அப்படின்னுட்டு 'பெல்'லை மட்டும் எடுத்துப் பூட்டி வச்சுட்டுப் போயிட்டேன், சார்! நான் இல்லாதப்போ அது எதுக்கு சார், இங்கே? பெல் இல்லாததுலேருந்தே நான் லீவிலே இருக்கேன்னு தெரிஞ்சுக்கிட்டிருக்கலாமே. நீங்க!"

# 'அல்டாப்' ஆறுமுகம்

அல்டாப் ஆறுமுகம் தன் கீழ் உதட்டை இழுத்து மடித்து 'உய்...' என்று ஒரு விசிலடித்தால், அது அந்த வட்டாரம் முழுவதுமே எதிரொலிக்கும். அந்தச் சீட்டியின் சாயலி லிருந்தே தங்கள் வாத்தியார் தூரத்தில் வந்துகொண்டிருக் கிறார் என்பதை ஆறுமுகத்தின் சகாக்கள் புரிந்துகொண்டு விடுவார்கள்.

டீக்கடை, சலூன், சினிமாக் கொட்டகை, ரிக்ஷா ஸ்டாண்டு—இம்மாதிரி இடங்களில்தான் அவனுடைய சீடர் கள் சுற்றிக் கொண்டிருப்பார்கள். 'சலாம் வாத்தியாரே!' என்று ஆறுமுகத்தை அன்புடன் வரவேற்பார்கள். அவனி டத்தில் அவர்களுக்கு ஒரு தனி மரியாதையும் பக்தியும் உண்டு.

இரவு 'நைட்ஷோ' ஆரம்பித்து ஊர் அடங்குகிற நேரத் தில்தான் ஆறுமுகத்தின் அட்டகாசம் ஆரம்பமாகும்.

''டாய்......கேட்டுக்கினீங்களாடா, நம்ப வெங்கடேசன் கதையை; பொறுக்கிப் பையன் புத்தியைக் காமிச்சுட் டான்டா...நேத்து ராத்திரி மணி ஒண்ணு இருக்கும்; நாடார் கட்டைத் தொட்டி இருக்குதுல்லே, அந்தச் சந்துலே வாரன்... கும்முனு இருக்குது இருட்டு! நாயர் கடை இன்னும் மூடியா வல்லே. அங்கே போய் ஒரு பிடியைப் பத்த வச்சுக்கிட்டு ஜைலண்டா நடக்கறேன். தபால் பொட்டி பக்கத்துலே முருங்கமரம் இல்லே, அந்தக் குடிசைக்குள்ளாற யாரோ

பொம்பளை அழுவற சத்தம் கேக்குது. நடுப்புற ஆம்பளைக் குரலும் கேக்குது.

"கம்மலைக் கழட்டிக் குடுக்கப் போறயா, இல்லே உதை வாங்கப் போறயான்னு' ஒரே அடியா கலாட்டா பண்றான் அவன். அதுவோ 'லபோ திபோ'ன்னு அடிச்சுகினு அழுவுது; பாவம்!

"நீ என்னை வீட்டைவிட்டு அடிச்சித் துரத்தி ஆறுமாசம் ஆவுது. இங்கே ஏன் வரே நீ? எங்கண்ணணங்காரன் சேஞ்சு போட்ட கம்மல் இது. நீ என்னை வெட்டிப் போட்டாலும் சரி, குடுக்கமாட்டேன்'னுது

"இவன் அத்தோட வுட்டுட்டுப் போக வேண்டியது தானே? கம்மலைக் கழட்டிக் குடுத்தாத்தான் ஆச்சுன்னு அடா வடித்தனம் பண்றான். இன்னாடா அக்குரும்பு இது? எனக்குப் பொறுக்கல்லே; நான் ரவுடிதான். ஆனா நாயத்துக்குக் கட்டுப்பட்டவன். உள்ளே அப்படியே பாஞ்சி அவனை இழுத்து வந்து வெளியே போட்டேன். இவன் என்னைக் கண்டுட்டுத் திக்குமுக்காடறான். 'இன்னாடா சோம்பேறி! கம்மலா வோணும் ஒனக்கு? இந்தா வாங்கிக்கோன்னு' உட்டேன் பாரு ஒண்ணு, அப்படியே கீழே குந்திக்கினான்.

"டேய், மரியாதையா இந்த இடத்தை உட்டுப் போயிடு. இல்லாட்டி நான் பொல்லாதவனாயிருப்பேன். யாரும் இல்லாத நேரத்திலே ஒரு பொம்பளை கிட்டே வந்து கலாட்டாவா பண்றே? சோமாறி! பாவம், பச்சைப் பொண்ணு! அதை வெச்சுக் காப்பாத்தத் துப்பு இல்லே உனக்கு. போடா கைராத்து! இன்னாடா மொறைக்கிறே? நீ பெரிய சீமானா? சார்பட்டா பரம்பரை வஸ்தாதா? போடாஆ! கையிலே இன்னா இருக்குதுனு பார்த்துகினியா? அப்படியே சீவிடுவேன், சீவி! நம்பகிட்டயா கமால் காட்றே நீ? நட்டைக் கயிட்டிடு வேன் ராஸ்கோல்னேன்!"

"இதுக்குள்ளே அக்கம்பக்கமெல்லாம் 'ஜேஜே'ன்னு கூடிப்போச்சு,

"டேய், அல்டாப்! உனக்கு வெக்கறேன் இருடா 'வேலெ'ன்னு சொல்லிக்கினே சைக்கிள்ளே குந்திக்கினு பறந் துட்டான் அந்தத் துடை நடுங்கி!

"போடா கய்தே! எங்கிட்டே ஒரு கும்மாகுத்து தாங்கு வியா நீ...உனக்கு ஓர் அடையாளம் பண்ணி வெக்கறேன் இரு'ன்னு சவால் விட்டுட்டு வந்துட்டேன். பாவம், அந்தப் பொண்ணு மொகத்தைப் பார்த்தேன்; அப்படியே மனசு எளகிடுச்சுப்பா! நான் ரவுடிதாம்பா. ஆனா, நல்லவனுக்கு நல்லவன், கெட்டவனுக்குக் கெட்டவன். நாயம் அநியாயம் பார்க்கணும்பா எதுக்கும் இவனுட்டமாவா? செங்கல் சூளை தன்சேகரன்கிட்டே துட்டு வாங்கிக்கினு பள்ளிக்கூடம் போற பையன்கிட்டே போய், அநியாயமா வலுச்சண்டைக்கு நிக்க றுனே; அது இன்னு யோக்யதை...? அடடே! அந்தக் கதை தெரியாதா உனக்கு? சொல்றேன் கேளு. தாய் தவப்பன் இல்லாத பொண்ணுப்பா அது. தௌஜன் லேட்லே ரொட்டிக் கடை வெச்சுருக்குது. இந்தத் தன்சேகரன் பையன் மல்லு ஜிப்பா போட்டுக்கினு, கழுத்திலே ஒரு தங்க சையினை மாட்டிக்கினு அந்தப் பொண்ணை 'டாவு' அடிக்கிறுன். அது இவனைச் சட்டை பண்லே. பள்ளிக்கூடம் படிக்கிற அந்தப் பையனும் அதுவும் சிநேகிதம். செங்கல் சூளையானுக்கு அது ஆவலே. அந்தப் பள்ளிக்கூடத்துப் பையனை மடக்கி அடிக் கிறதுக்கு ஏற்பாடு பண்ணிட்டான். இந்தப் பொறுக்கி வெங்கடேசன் தான் அவனுக்குக் கையாளு. தன்சேகரன் கிட்டே துட்டை வாங்கித் துன்னுக்கினு தினம் போய் வரான் இவன். ஒன்னுப் பையனை அடிக்கணும்; இல்லாட்டி துட்டைத் திருப்பிக் கொடுத்துடணும். துட்டை வாங்கிக் கினு ஆளை அடிக்காம ஏமாத்தறது எந்த நாயத்தைச் சேர்ந்தது? அவனைச் சும்மா உடலாமா? இது ஒரு பொழைப்பா? இன்னைக்கு ஆவட்டும்...அவனுக்கு வெக்கறேன் வேலை!"

* * * *

சினிமாக் கொட்டகை வாசலில் ஒரு பெரிய கூட்டம்,

அந்தக் கூட்டத்துக்கு நடுவில் ஒரு பலம் வாய்ந்த கை பிச்சுவாவை உயர்த்திக்கொண்டு நிற்கிறது. அந்தக் கையை வேறொரு கை இறுகப் பிடித்துக்கொண்டிருக்கிறது. கத்தி மேலாக எந்தத் திசையில் நகருகிறதோ, அந்தப் பக்கமே அந்தக் கூட்டமும் சாய்கிறது. அந்தக் கத்திக்குரியவன் வேறு யாருமல்ல; 'அல்டாப்' ஆறுமுகந்தான். வெங்கடேசன் முதுகை அந்தக் கத்தி பதம் பார்த்துவிட்டது. வெங்கடேசன் ஆஸ்பத்திரிக்குப் போய்விட்டான். ஆறுமுகம் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்க்கொண்டிருக்கிறன்!

"ரௌடியாயிருந்தா என்ன? அதுக்காவ அக்கிரமம் செய்யலாமா? அதான் கீறிட்டேன். ஜெயிலுக்குப் போனாலும் பரவாயில்லே. டாய்! எவனாச்சும் தப்புத்தண்டா சேஞ்சிங்க, திரும்பி வந்ததும் தீர்த்துப்புடுவேன். ஆமாம், சொல்லிட்டேன். இந்த 'அல்டாப்' நல்லவனுக்கு நல்லவன், கெட்டவனுக்குக் கெட்டவன்!"

# மூணு சீட்டு முத்தண்ணா

தம் தலையணைக்கு அடியில் வைத்திருக்கும் சீட்டுக்கட்டை எடுத்துக் கண்களில் ஒற்றிக்கொண்ட பிறகுதான் முத்தண்ணா தினமும் காலையில் படுக்கையைவிட்டு எழுந்திருப்பது வழக்கம்.

'சீட்டாட்டம் என்பது பொழுது போக்குக்காக ஏற்பட்ட ஒரு விளையாட்டு' என்றே அவர் எண்ணுவதில்லை. 'மனிதன் பிறப்பதே சீட்டாடுவதற்காகத்தான்; பணத்தைச் சம்பாதிப் பதே சீட்டாடுவதற்காகத்தான்' என்பது அவர் நினைப்பு.

எல்லா ஆபீஸ்களிலும் வேலை நேரத்தைக் குறைத்து, சீட்டாடும் கிளப்புகளில் இன்னும் கொஞ்சம் அதிக நேரத்தை ஒதுக்கவேண்டுமென்பது அவர் கருத்து. ஒவ்வொரு சமயம் தாம் ஏன் பள்ளிக்கூட வாத்தியாராகவோ, வக்கீலாகவோ போயிருக்கக் கூடாது என்று எண்ணி வருத்தப்படுவார். காரணம் : அந்த உத்தியோகங்களில் 'சம்மர் வெகேஷ'னும் சேர்ந்து அதிக நாட்கள் லீவு கிடைக்குமல்லவா? லீவு நாட் களில் சீட்டாடுவது போதாதென்று, இரவு நேரங்களிலுங்கூட ஆடுவார். ஆபீசில் டிபன் சாப்பிடுவதற்காக விடும் 'இண்டர் வல்' நேரத்தை வீணாக்க மனமின்றி அப்போதும் இரண்டு ஆட்டம் போடுவார்.

ஆபீஸுக்குப் புறப்படும்போது 'பைல்' கட்டை எடுத்துக் கொள்ள மறந்தாலும் சீட்டுக் கட்டை எடுத்துக்கொள்ள அவர் ஒரு நாளும் மறக்கமாட்டார்.

'நாலு பேர் சேர்ந்து செய்கிற நல்ல காரியங்களில் சீட்டாட்டத்தைப் போன்ற சிறந்ததொரு பணி வேறொன்றும் கிடையாது' என்பது முத்தண்ணாவின் மணி மொழிகளில் ஒன்று. இராம சரித்திரம் சொல்லப்படும் இடங்களிலெல்லாம் அநுமார் பிரசன்னமாகியிருப்பார் என்று கூறுவது உண்டல்லவா? அதைப்போலவே சீட்டுக் கச்சேரி நடைபெறும் இடங்களிலெல்லாம் முத்தண்ணா பிரசன்னமாகியிருப்பார்!

எங்கேயாவது குழப்பம், கலவரம் ஏற்படுகிறபோது சர்க்கார் நாலு பேருக்குமேல் தெருவில் கூடக்கூடாது என்று 144 உத்தரவு போட்டால், 'நாலு பேர் வீதிகளில்தானே கூடி நிற்கக்கூடாது? வீட்டுக்குள் கூடிச் சீட்டாடுவதற்குத் தடையில்லையே!" என்பார் அவர்.

விடுமுறை நாட்களில் முத்தண்ணாவின் தோழர்கள் அவருடைய வீட்டுக்கு வந்து, "என்ன முத்தண்ணா, கச்சேரி ஆரம்பிக்கலாமா?" என்பார்கள். அவ்வளவுதான்; முத்தண்ணா பாயைப் பிரித்துப்போட்டுச் சீட்டைக் குலுக்கத் தொடங்கினால் அப்புறம் பிரளயமே வந்தாலும் தெரியாது. அன்று முழுவதும் முத்தண்ணா வீட்டில்தான் அவ்வளவு பேருக்கும் டிபன் காப்பி சப்ளை!

முத்தண்ணாவின் மனைவி, "உங்களுக்கு என்ன வேலை, வீட்டிலே ஒரு படையைச் சேர்த்து வைத்துக்கொண்டு?" என்று எரிந்தெரிந்து விழுவாள். முத்தண்ணா அவ்வப்போது ஆட்டத்திலிருந்து நழுவிச் சமையலறைப் பக்கம் போய் மனைவியைச் சமாதானப்படுத்திவிட்டு வந்து உட்காருவார்.

முத்தண்ணாவின் குழந்தைகளுக்கும் அன்றெல்லாம் ஓயாமல் வேலை இருந்துகொண்டிருக்கும்.

"கடைக்குப் போய்ச் சீவல் வாங்கிண்டு வாங்கடா, கூஜாவிலே தண்ணி கொண்டு வாங்கடா!" என்று அவர்களை ஏதாவது ஏவிக்கொண்டேயிருப்பார்.

பையன்களும் உற்சாகமாக ஓடிப் போய் வந்துகொண் டிருப்பார்கள். காரணம், ஐஸ் க்ரீம் வாங்கிச் சாப்பிட அவர் களுக்குக் காசு கிடைக்கும்!

சீட்டாட்டத்தில் அப்பாவின் லாப நஷ்டங்களை யெல்லாம் குழந்தைகள் அவ்வப்போது கவனித்து அம்மாவுக்கு அஞ்சல் செய்துகொண்டிருப்பார்கள்.

'கடமையைச் செய், பலனை எதிர்பாராதே' என்ற கீதை வாக்கியத்தைக் காரியத்தில் கடைப்பிடிப்பவர் முத்தண்ணு. சீட்டாட வேண்டியது அவருடைய கடமை. பலனைப்பற்றி அவர் ஒருபோதும் கவலைப்பட்டதில்லை. ஆட ஆடப் பணம் போய்க்கொண்டேயிருக்கும் அவருக்கு. ஆனால் எவ்வளவு பணம் போனாலும் சளைக்கமாட்டார் அவர்.

ரம்மியில் விட்டதை மூணு சீட்டில் பிடிக்கப் பார்ப்பார். மூணு சீட்டில் விட்டதை ரம்மியில் பிடிக்கப் பார்ப்பார். சீட்டாட்டத்தின்போது அவருக்குள்ள கவலையெல்லாம் கையி லுள்ள பணம் தீர்ந்து போய்விட்டால் அடுத்தாற் போல் சீட்டாடுவதற்கு என்ன செய்வது என்பதுதான்.

சீட்டாட்டத்தில் நேர்மையையும் ஒழுங்கையும் கடைப் பிடிப்பவர் அவர். ஒரு சமயம் அவரும் எதிர் வீட்டு நண்பரும் மட்டும் உட்கார்ந்து சீட்டாடிக்கொண்டிருந்தனர். எதிர் வீட்டு நண்பர் ஆட்டத்துக்கு இடையில் சற்று அவசரமாக எழுந்து வீட்டுக்குப் போனார். அவர் திரும்பி வரும்வரை சும்மா இருக்கப் பிடிக்காத முத்தண்ணு நண்பரின் சீட்டையும் தாமே எடுத்து ஆடிக்கொண்டிருந்தார். எதிர் வீட்டுக்காரர் திரும்பி வந்ததும், "இந்தாங்க சார், உங்க ஆட்டத்தையும் நானே ஆடினேன். அதில் எனக்கு இரண்டரை ரூபாய் நஷ்டம். உமக்கு இரண்டரை ரூபாய் லாபம்" என்று சொல்லிக் காசை எண்ணிக் கொடுத்தார்.

முத்தண்ணுவிடம் இன்னொரு நல்ல குணமும் உண்டு.

"சார், நாற்பது ரூபா இருந்தா கொடுங்க நாளைக்குச் சாயந்தரம் ஆறு மணிக்கெல்லாம் திருப்பிக் கொடுத்துடறேன்" என்று தெரிந்தவர்களிடம் கடன் வாங்கிக்கொண்டு போவார். ஆட்டத்தில் நஷ்டம் வந்தாலும் லாபம் வந்தாலும் மறுநாள் மாலை ஆறு மணிக்குத் தலையை 'அடகு'வைத்தாவது கடனைத் திருப்பிக் கொண்டு போய்க் கொடுத்து விடுவார்.

சம்பாதிப்பதையெல்லாம் சீட்டில் தொலைப்பதே முத்தண்ணாவின் வழக்கமாகிவிடவே, அவருடைய நண்பர்கள் பலர் அவரோடு சீட்டாடுவதையே நிறுத்திக்கொண்டார்கள். "முத்தண்ணா! உமக்கு வயசாச்சு; உம்முடைய பெண் கலியாணத்துக்குக் காத்துக்கொண்டிருக்கிறாள். அதைப்பற்றி உமக்குக் கொஞ்சமாவது கவலை இருக்கிறதா? இந்த வழக்கத்தையே இனி விட்டுவிடவேண்டும். எப்போதாவது கலியாணம் போன்ற விசேஷ நாட்களில்மட்டும் ஆடுங்கள். போதும்" என்று அவரிடம் சத்தியம் வாங்கிக் கொண்டனர். சத்தியத்துக்குக் கட்டுப்பட்ட முத்தண்ணா சரி என்று ஒப்புக் கொண்டார்.

அவ்வளவுதான். வெகு சீக்கிரத்திலேயே அவர் தம் பெண்ணுக்கு ஒரு வரனைப் பார்த்துக் கலியாணத்திற்கு நிச்சயம் செய்துவிட்டார். "எல்லோரும் முத்தண்ணாவுக்குப் புத்தி வந்துவிட்டது" என்று சொல்லிச் சந்தோஷப்பட்டார்கள்.

ஆனால் முத்தண்ணா தம் மகளின் திருமணத்தை அவ்வளவு சீக்கிரம் முடித்தது எதற்குத் தெரியுமா? இனிமேல் நிம்மதியாய்ச் சீட்டாடிக்கொண்டிருக்கலாம் அல்லவா?

# அப்பர் பர்த் குப்பண்ணு

அதோ, அப்பர் பர்த்தில் ஆனந்தமாகப் படுத்துக் கொண் டிருக்கிருரே, அவர்தான் குப்பண்ணு! இப்போது டில்லிக்கு ஒரு காரியமாகப் போய்க்கொண்டிருக்கிருர். அடுத்த வாரம் அங் கிருந்து கல்கத்தா போகவேண்டும். அப்புறம் மெட்ராஸ். மறுபடியும் மார்ச் முதல் வாரத்தில் மேற்கு ஜெர்மனி!

ஜெர்மானியர்களின் கூட்டுறவுடன் இந்தியாவில் ஒரு கடி காரத் தொழிற்சாலை தொடங்குவதற்குத்தான்அவர், இப்படி ஓயாமல் அலைந்துகொண்டிருக்கிருர். புதுமையான மோதிரக் கடிகாரம் ஒன்றைத் தயாரிக்கவே அவர் இப்போது திட்டம் போட்டு வேலை செய்து வருகிருர். அதாவது, மோதிரத் திலேயே வாட்சும் இருக்கும்!

இந்தியாவில் ஒரு தொழிற்சாலை தொடங்க வேண்டும். இதற்கு யாராவது முதல் போட வேண்டும். குப்பண்ணு பணம் ஏதும் போடாமலே தொழிற்சாலையில் முக்கிய பாகஸ்தர்களில் ஒருவராக இருப்பார். அதாவது, அவல் கொண்டு வருகிறவர் ஒருவர்; உமி கொண்டு வருகிறவர் இன்னொருவர். இரண்டையும் கலந்து ஊதிச்சாப்பிடுகிறவர் குப்பண்ணு!

தொழிற்சாலைக்குப் பெயர் என்ன தெரியுமா? இண்டோ-குப்-ஜெர்மன் ரிஸ்ட் வாட்செஸ் லிமிடெட்!

நடுவிலுள்ள 'குப்' என்பது குப்பண்ணுவைக் குறிக்கும். இப் படி ஒரு 'லெட்டர் ஹெட்'டை பிரிண்ட் செய்து வைத்துக்

கொண்டு பல தொழிலதிபர்களுடன் கடிதப்போக்குவரத்து நடத்தி வருகிறார்.

குப்பண்ணாவிடம் உள்ள முதலெல்லாம் பேச்சுத் திறமை தான். அவர் இங்கிலீஷ் பேசினால் பியானோ வாத்தியம் போல அவ்வளவு இனிமையாயிருக்கும். ஆங்கில மொழியை அழகாகப் பேசுதில் 'ஸில்வர் டங்' சீநிவாச சாஸ்திரியாருக்கு அடுத்த படி தாம்தான் என்பது குப்பண்ணாவின் எண்ணம்!

"கடிகாரத் தொழிற்சாலை சம்பந்தமான பேப்பர் ஒன்று இண்டஸ்ட்ரீஸ் அண்டு காமர்ஸ் டிபார்ட்மெண்டில் சிக்கிக் கொண்டிருக்கிறது. அதை மெல்லக் கிளப்பி, பைனான்ஸ் டிபார்ட்மெண்டுக்குத் தள்ளிவிட்டு வரவேண்டும். அதற்காகத் தான் இப்போது டில்லிப்பயணம். அதை முடித்துவிட்டு அங்கிருந்து கல்கத்தாவுக்குப் போய்ச் சட்டர்ஜியைப் பார்த்து ஷேர் சேர்க்கும் விஷயமாகப் பேசவேண்டும். அகமதாபாத்தில் தொழற்சாலை தொடங்க இடம் தருவதாக ஒரு குஜராத்திக் காரர் சொல்லியிருக்கிறார்."

இப்படி வருஷம் முழுவதும் ஓயாமல் ரயில் பிரயாணம் தான். அதுவும் மூன்றாம் வகுப்பு அப்பர் பர்த்துத்தான்! தொழிற்சாலை ஆரம்பித்துவிட்டால் அப்புறம் கவலையில்லை. கம்பெனிச் செலவில் முதல் வகுப்பிலேயே பிரயாணம் செய்யலாம்.

குப்பண்ணா ஊருக்குப் போவதென்றால் ரயில் புறப்படுவதற்கு இரண்டு மணி நேரம் முன் கூட்டியே ஸ்டேஷனுக்குப் போய் எப்படியாவது அப்பர் பர்த்தைப் பிடித்துவிடுவார். உடனே ஹோல்டாலைப் பிரித்துப்போட்டு அந்த இடத்தைத் தமக்குச் சொந்தமாக்கிக்கொண்டு விடுவார். சற்று நேரத்தில் அவருடைய செருப்புகளைத்தவிர மற்றச் சாமான்களெல்லாம் மேலே போய்விடும். ரயில் நகர்ந்ததும் அவரும் மேலுக்குத் தாவிவிடுவார்.

அவ்வளவுதான்; வேளா வேளைக்குச் சாப்பாடு, காப்பி எல்லாம் அப்பர் பர்த்திலேயேதான். எதற்கும் கீழே இறங்க மாட்டார். மேலிருந்தபடியே கீழே உட்கார்ந்திருப்பவர்கள் அத்தனை பேருக்கும் வேலை கொடுத்துத் தம் காரியங்களைச் சாதித்துக்கொள்ளும் திறமை அவருக்கு உண்டு.

நாலைந்து ஸ்டேஷன்கள் போவதற்குள் கீழே உட்கார்ந் திருப்பவர்கள் யார் யார், அவர்கள் எங்கே போகிறார்கள் என்பது போன்ற எல்லா விவரங்களையும் அறிந்துகொண்டு விடுவார்.

மேலே இருந்தபடியே அவருக்கு எல்லாம் தெரியும். எப்போதாவது கீழே இறங்கவேண்டுமானால் டக்கென்று லாகவ மாகக் காலைக் கீழே வைப்பார். அப்படி வைக்கும்போதே தயாராக இருக்கும் அவருடைய பாதரட்சைகள் இரண்டும் அவர் பாதங்களை ஏந்திக்கொள்ளும். அவ்வளவு அநுபவம் ரயில் பயணத்தில்!

ஒவ்வொரு ஸ்டேஷனிலும் ரயில் போய் நிற்குமுன்னரே, "இதென்ன ஓங்கோலா? இதென்ன நாக்பூரா? இதென்ன குவாலியரா?" என்று கேட்டுக்கொண்டிருப்பார். கீழே இருப்ப வர்கள் வெளியே எட்டிப் பார்த்தால் அவர் சொல்கிறபடியே எல்லா ஸ்டேஷன்களும் டக் டக் என்று வந்துகொண்டிருக்கும். "அடுத்தாற்போல் வார்தா ஸ்டேஷன் வரப்போகிறது; அங்கே ஆரஞ்சு மலிவு!" என்பார். வார்தாவும் வரும். ஆரஞ்சு வண்டி யும் வரும்; மலிவாகவும் கிடைக்கும்!

அவர் ஆரஞ்சுப் பழங்களை வாங்கி வைத்துக்கொண்டு அப்பர் பர்த்திலிருந்தபடியே அவற்றைச் சாப்பிடும் அழகே தனி. ஆரஞ்சுத் தோலைக் கிண்ணம்போல் உரித்து வைத்துக்கொண்டு விதைகளை அந்தக் கிண்ணத்தில் துப்பிக்கொள்வார். பிறகு அதை அப்பர் பர்த்திலிருந்தபடியே லாகவமாக யார்மீதும் படாமல் ஜன்னலுக்கு வெளியே வீசிவிடுவார்.

வண்டியில் யாராவது சண்டைக்காரர்கள் வந்துவிட்டால் அவர்களுக்கும் பயப்படமாட்டார், குப்பண்ணு!

சில சமயம் வடக்கத்திக்காரர்கள் இவர் அப்பர்பர்த் முழுவதையும் ஆக்கிரமித்துக்கொண்டிருப்பது பிடிக்காமல் கோபமாகச் சண்டை போடுவார்கள். இவரும் சளைக்க மாட்டார். அவர்கள் இவருக்கு இந்தி தெரியாதென்று நினைத்து கொண்டு இவரை இந்தியில் திட்டுவார்கள். அம்மாதிரி சமயங்களில் குப்பண்ணு சற்று நேரம் இந்தியே புரியாதவர்போல் புன்சிரிப்புடன் மௌனமாக இருப்பார்.

பிறகு வண்டியிலுள்ள தமிழர்களிடம், "இந்த மடையன்கள் எனக்கு இந்தி தெரியாதென்று நினைத்துக்கொண்டு என்னை கண்டபடி திட்டிக்கொண்டிருக்கிறார்கள். இப்போது பாருங்கள். இந்தியிலே பேசப் போகிறேன். அப்படியே அலறப்போகிறான்கள்!" என்பார்.

இரவு பதினொரு மணிக்குமேல் அந்தக் கம்பார்ட்மெண்டில் யாராவது சத்தம் போட்டுச் சிட்டாடினால் அவர் சும்மா இருக்க மாட்டார்.

"கொஞ்சம் சத்தம் போடாமல் இருங்கள், சார்! தூங்க வேண்டும்" என்பார்.

"இது முதல் வகுப்பு இல்லை, மூன்றாம் வகுப்பு" என்பார்கள் அவர்கள்.

"மூன்றாம் வகுப்பென்றாலும் அதற்காகச் சத்தம் போட வேண்டுமென்று கட்டாயமில்லை, சார். நீங்க பேசறதை நிறுத்த போறீங்களா? அல்லது, நான் ரயிலை நிறுத்தட்டுமா?" என்று ஒரு போடு போடுவார் அவர். அப்பர் பர்த் குப்பண்ணுவா கொக்கா!

# 'தொழிலாளி' துளசிங்கம்

தொழிலாளர்கள்பிரயாணம் செய்வதற்காகவே ஏற்பட்ட அந்த ரயிலில் தொழிலாளி துளசிங்கம் ஒரு குறிப்பிட்ட இடத்தில்தான் தினமும் உட்காருவான். அந்த இடத்தில் 'ஆடு - புலி' கட்டம் ஒன்று ஆணியால் செதுக்கப்பட்டிருக்கும். துளசிங்கத்தையும் அவன் தோழர்களையும் தவிர வேறு யாரும் அந்த இடத்தில் உட்காரமாட்டார்கள். தொழிலாளர்களுக் குள்ளே அப்படி ஒருகட்டுப்பாடு

தலை முழுகினுப்போல் எண்ணெய்ப் பசையற்ற கிராப்பு சந்தனப் பொட்டு. பனியன். பனியனுக்கு மேலே ஓபன் கோட். அதற்கு மேல் வெள்ளைக்கோடு போட்ட சிவப்புக் காசிப்பட்டு. யாரையும் எதிர்த்துப் பேசக்கூடிய முரட்டு முகபாவம்! கையிலே ஒரு டிபன்பாக்ஸ். கக்கத்தில் ஒரு குடை!

துளசிங்கம் வந்து ரயில் ஏறவேண்டியதுதான். 'ஆடு-புலி' ஆட்டம் ஆரம்பமாகிவிடும்.

"இன்னா தொள்சிங்கம்! ஏன் கண்ணெல்லாம் ஒரு மாதிரி 'ஜவ ஜவா'ன்னு இருக்குது?"

"தெரியாதா ஒனுக்கு? இந்த ஏழுமலை இல்லே ஏழுமலை? அதாம்பா அந்த ஐனுவரத்து ஆளு...சைக்கிள் சாப்லே இருந்தாரே அவன்..."

"ஆமா', இப்ப டாணுக்காரனாயிட்டானே, அவன் தானே?..."

"ஆமா; அவனேதான். ராத்திரி செகண்ட் ஷோ பாத்துட்டு சைக்கிள்ளே வரேன். மூலகோத்ரம் வழியா புளியாந் தோப்புலே உழுந்து பாராவதி மேலே மெதிக்கிறேன். இவன் குறுக்கே வந்து மறிச்சிக்கனும்பா!"

"எந்த பாராவதி? அம்பட்டன் பாராவதியா, இல்லே பலகை பாராவதியா?"

"அட, ஆர்ரா இவன் ஒருத்தன், ஏடாகூடம்...ஒட்டேரி பாராவதிப்பா..."

"உம்; அப்பாலே...?"

"அப்பாலே இன்னா? வா, டேசனுக்குங்கறான்."

"எதுக்கு?"

"சைக்கிள்ளே லைட் இல்லியாம்! இவன் எப்டி இருந்த ஆளு? என்னைப் பார்த்து டேசனுக்கு வான்னு கூப்படறாம்பா? கேட்டுக்கினியா கதையை? போன வெசாயக் கிழமை ரெண்டு ரூபா கைமாத்துக் கேட்டான். இல்லேப்பாண்னேன். அந்த ஆத்திரம்போல இருக்குது; கேசு புடிக்கிறாரு எம்மேலே... 'காத்துலே லைட் அணைஞ்சு போச்சு. இன்னங்கூட சூடு ஆறல் லே'ன்னு சொன்னேன். கேக்கலே. அவன் கையைப் புடிச்சு 'சுடச் சுட' லைட்மேலே வெச்சு 'பாத்துக்கினியா'ன்னேன்... கையைச் சுட்டுக்கினு லபோ திபோன்னு கத்தறான்."

"அப்புறம்...?"

"அப்புறம் இன்னா? எங்கிட்டே விளையாட்னா? கையைச் சுட்டுக்கினு மரியாதையா நவந்துட்டான்...ஆவட்டும், நீ தாயத்தை உருட்டு..."

உருட்டிய தாயக்கட்டை, ஓடுகிற ரயிலிலிருந்து கீழே விழுந்துவிட்டது. அவ்வளவுதான்! துளசிங்கம் அபாயச் சங்கிலியைப் பிடித்து இழுத்து, ரயிலை நிறுத்திவிட்டான்.

சங்கிலியை இழுத்து ரயிலை நிறுத்துவது அந்த ரயிலில் அடிக்கடி நடைபெறும் சர்வ சாதாரண நிகழ்ச்சி!

ஆனால், அன்று அந்த ரயிலில் புதிதாக வந்த கார்டுக்கு இந்த விஷயம் தெரியாது. ரயில் நிறுத்தப்படவே அவர் பரபரப்புடன் கீழே இறங்கி வந்து, "யார் சங்கிலியை இழுத்தது?" என்று அதிகாரத்துடன் கேட்டுக்கொண்டே ஒவ்வொரு கம்பார்ட்மெண்டாகப் பார்த்துக்கொண்டு வந்தார்.

ஒருவரும் அவருக்குப் பதில் சொல்வதாகக் காணோம். கடைசியாக, துளசிங்கம் இருந்த கம்பார்ட்மெண்டில் வெளியே, ஒரு தகடு துருத்திக்கொண்டிருப்பதைக் கண்ட கார்டு, "யார் இழுத்தது? உண்மையைச் சொல்லிவிடுங்கள். இல்லாவிட்டால் ரயில் போகாது. அபராதம் ஐம்பது ரூபாய்" என்று ஆவேசம் வந்தவர்போல் கோபமாகப் பேசினார்.

துளசிங்கம் தலையை வெளியே நீட்டி, "இன்னய்யா! இப்ப இன்னய்யா சொல்றே?" என்று கார்டைப் பார்த்துக் கேட்டான்.

"சங்கிலியை யார் இழுத்தது?" என உறுமினார் கார்டு.

"ஏன்! நான்தான் இழுத்தேன். இப்ப இன்னன்றே?"

"காரணமில்லாமல் சங்கிலியை இழுத்தால் அபராதம் அம்பது ரூபாய்னு தெரியாது உனக்கு?"

"குட்ரு இவருக்கு ... அம்பது ரூபா ... வாங்கிக்கினு போவாரு. கன்னிப்பா...யார்ரா இவரு புச்சாக்கிறுரு கார்டு? நம்ப பழைய கார்டு வாசதேவராவ் வல்லியாடா? அதானே பார்த்தேன். ரயிலு நிண்ணதும் ஓடியாந்துட்டாரே! யோவ்! தாயக்கட்டை உளுந்துடுச்சு. வண்டியை நிறுத்தி எடுத்துக்கினேன். இப்ப இன்னய்யா பூடிச்சு உனக்கு? பித்தளை தாயக் கட்டையாச்சே. போயிடுச்சுன்னா நீ குடுப்பியா? கொடியைக் காட்டி வண்டியை உடுய்யா, சர்தான்; நீட்டா போயிக்கினே இரு. டேய், இவுருக்கு இந்த லயன்லே பழக்கம் இல்லேபோல

இருக்குது டோய்! எந்தச் சீமானும் இதுவரைக்கும் நம்பளைப் பார்த்துக் கேள்வி கேட்டதில்லே...இவரு என்னடான்னு?"

அன்று பகல் வேளைச் சாப்பாட்டுக்குப் பிறகு வழக்கமாக நடைபெறும் தொழிலாளர்கள் கூட்டம் நடந்துகொண்டிருந்தது.

"சகோதரத் தொழிலாளர்களே! இன்று நமது நாட்டை மேல் நாடுகளுடன் ஒப்பிட்டுப் பாரத்தால்...ரஷ்யாவைப் பாருங்கள், சைனாவைப் பாருங்கள்...அங்குள்ள தொழிலாளர் கள் ஒவ்வொருவரும் ஒரு கார் வைத்துக் கொண்டிருக்கிறார் கள்..." என்று தோழர் ஒருவர் பேசிக் கொண்டிருந்தார்.

"யோவ்! நிறுத்துய்யா சரிதான்..."—துளசிங்கம் எழுந்து நின்றான்.

"மேல் நாடு, ரஷ்யா, சைனா அதெல்லாம் இருக்கட்டும்யா. அவங்க காருலே போனா நமக்கு இன்னா ஆச்சு? நம் ஊர் விசயம் பேசுய்யா. அரிசி என்னா வெலை விக்குது பார்த்தியா? அதுக்கு ஒரு வழி பண்ணுவியா! சைனாவாம், ரஷ்யாவாம்..."

கூட்டத்தினர் எல்லோரும் துளசிங்கம் கேள்விக்குக் கை தட்டி உற்சாகப்படுத்தி ஆரவாரம் செய்தார்கள். பிரசங்கி பதில் கூறமுடியாமல் திணறிப்போய் அசந்து உட்கார்ந்து விட்டார்.

"டாய்! துளசியைப் பார்த்துக்கினியாடா, கேட்டான். பார்த்தியா கேள்வி, சரியான பாயிண்டுப்பா. அரிசிலே மடக் கினான் பாரு! அடுத்த வருஷம் நம்ப சங்கத்துக்கு தொள்சி தாம்பா தலைவரு. கன்னிப்பன் சொகம் இல்லேப்பா..."

"தொள்சிங்கம் வாழ்க!" என்ற கோஷத்துடன் கூட்டம் முடிவடைகிறது.

# அக்கப்போர் சொக்கப்பன்

"சார், சார்" என்று கையைத் தட்டிக் குடியே முழுகி விட்டதைப் போல் அவசரமாக யாரையோ கூப்பிடுகிறானே, அவன்தான் அக்கப்போர் சொக்கப்பன்.

காலம், இடம், மனிதர்களின் தராதரம் எதுவும் அவனுக்கு அக்கறை கிடையாது. யாராயிருந்தாலும், எந்தச் சந்தர்ப்பமாயிருந்தாலும், எந்த இடமாயிருந்தாலும் அவர்களைக் கூப்பிட்டு அவர்களிடம் பயங்கரமாக நாலு சங்கதிகளை யாவது சொல்லாவிட்டால் அவனுக்கு மண்டை வெடித்து விடும்.

"சார்! உங்களுக்குத் தெரியாதா சமாசாரம்? இப்படி எங்கே போகிறீர்கள்?" என்று கேட்பான்.

"ராயப்பேட்டைக்கு!" என்பார் அவர்.

"பாவம்; உங்களுக்கு ஒண்ணுமே தெரியாது போலிருக்கு. அந்தப் பக்கம் போகாதீங்க, சார்; கல்லடிபட்டுச் செத்துப் போவீங்க?" என்பான்.

"கல்லடியா? ஏன்? எதுக்கு? என்னை எதுக்கு அடிக்கிறாங்க?" என்று அலறுவார் அந்த ஆசாமி.

"அரசியல் கட்சி இரண்டு அந்தப் பக்கம் ஊர்வலமாப் போறப்போ இரண்டுக்கும் மோதல் ஏற்பட்டுப் பெரிய ரகளை! ஒரே கல் வீச்சு! ரோடு போடறதுக்காக அங்கே கொட்டி

யிருந்த ஜல்லிக் கல்லெல்லாம் தீர்ந்து போயிட்டுது. அத்தோடாவது சண்டையை நிறுத்தினுங்களா? இரண்டு கட்சிங்களும் சண்டை போடறதுக்காக ஜல்லிக் கல் கொட்டி யிருக்கும் பக்கமாவே போயிகிட்டிருக்காங்க. இதுவரைக்கும் மூந்நூறு பேருக்கு மேலே பலத்த அடி. நாலு பேர் மண்டை உடைஞ்சு செ த் து ட் டா ங் க. அடிப்பட்டவங்களுக்கு ராயப்பேட்டை ஆஸ்பத்திரியிலே இடம் போதாமல், ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு வேறே தூக்கிட்டு போறுங்க, சார்! ராயப்பேட்டை ரோாடு முழுதும் 'ஜே ஜே' என்று கூட்டம். இதுக்காகப் போலீசார் வேறே அந்தப் பக்கமா யாரையும் விடறதில்லே. நான் இப்போ அங்கிருந்துதான் சார் வாரன்'' என்று பயங்கரமாக ஒரு செய்தியை அவிழ்த்துவிடுவான்.

ராயப்பேட்டைப் பக்கம் போய்ப் பார்த்தால் அங்கே சண்டையும் இருக்காது. மண்டையும் உடைந்திருக்காது. இரண்டு பிச்சைக்காரர்களுக்குள் பஸ் ஸ்டாண்டில் ஏதாவது தகராறு நடந்திருக்கும். போலீசார் வந்து அவர்களைப் பிடித் துக்கொண்டு போயிருப்பார்கள். அவ்வளவுதான்; சொக்கப்பன் அதையே அரசியல் கட்சிச் சண்டையாக மாற்றிப் பிரமாதமாக வர்ணித்து விட்டிருப்பான்.

திடீரென்று ஓடி வந்து, "புழலேரி உடைத்துக்கொண்டு விட்டது. மவுண்ட்ரோடு பக்கம் வெள்ளம் வந்துகொண்டிருக் கிறது" என்று ஒரு புரளியைக் கிளப்பிவிடுவான். அந்தச் செய்தி கேட்டு மவுண்ட் ரோடே அல்லோல கல்லோலப்படும். அடுத்தாற்போல் மயிலாப்பூருக்குப் போய், "வெள்ளத்தில் மவுண்ட்ரோடு பூராவும் முழுகிவிட்டது. எல். ஐ. சி. கட்டடத்தைத் தவிர எல்லாம் போய்விட்டது" என்பான்.

அங்கிருந்து இன்னோர் இடத்துக்குப் போவான். அங்கே யாராவது குப்பை மேட்டுக்குத் தீ வைத்துக் கொளுத்திக் கொண்டிருப்பார்கள். அதைக் கண்டுவிட்டுத் தெரிந்தவ களிடமெல்லாம் ஓடிப்போய், "சார்; பழைய மாம்பலத்தில் ஒரு தெருவே தீப்பிடிச்சு எரியுது, சார். பெரிய தீ விபத்து

ஒரு டஜன் பயர் என்ஜின் வந்து தீயை அணைச்சுக்கிட்டிருக்குது. ஆனா இன்னும் தீ அடங்கின பாடில்லே" என்பான்.

அங்கிருந்து சீட்டாடும் கிளப்புக்குப் போய், மதுரையில் அனிதா போஸைப் பார்க்க, சுபாஷ்சந்திர போஸ் வந்திருப்பதாக ஒரு 'ரூப்' விடுவான்.

"நீ நேரில் பார்த்தாயா?" என்று கேட்டால், "பார்த்தேனா? அவரோடு பேசினேன். முத்துராமலிங்கத் தேவர்கூட என் அருகில் இருந்தாரே!" என்பான்.

"சுபாஷ் போஸ் என்ன சொன்னார்?" என்று கேட்டால் 'இனி இந்தியாவிலேயே தங்கிவிடப் போவதாகவும் சுதந்திரா பார்ட்டியில் சேர்ந்துவிடப் போவதாகவும், சொன்னார்' என்பான். அப்புறம் நாலைந்து நாளைக்கு சொக்கப்பனை கண்ணில் தென்பட மாட்டான். சுபாஷ்போஸ் மறைந்தது போல் அவனும் எங்காவது மறைந்து விடுவான்!

அவன் திரும்பி வந்தபிறகு, "சொக்கப்பா! எங்கே உன்னைக் கொஞ்சநாளாகக் காணோம்? எந்த ஊருக்குப் போயிருந்தாய்?" என்று கேட்டால், "பங்களூருக்குப் போயிருந்தேன். உங்களுக்குத் தெரியாதா சமாசாரம்?" என்று கேட்டுவிட்டு நம் காதோடு ஏதோ ரகசியத்தைச் சொல்ல வருவான்.

"பங்களூர்லே பாங்க் ஒண்ணு குளோஸ் ஆகப் போறதுன்னு எனக்கு ஒரு ஸீக்ரெட் இன்பர்மேஷன் கிடைச்சுது. உடனே போய் அந்த பாங்கியிலிருந்த என் பணம் பூரவையும் திருப்பி வாங்கிண்டு ராத்திரியோடு ராத்திரியா கார்லேயே திரும்பி வந்துட்டேன். அப்புறம் கேளுங்கோ. கையிலேயோ பத்தாயிரம் ரூபா காஷ்! கார் சித்தூரைத் தாண்டி நடுக்காட்டிலே வந்துகிட்டிருக்குது. நல்ல இருட்டு! நான் ஒண்டி ஆள். திடீர்னு ஏழெட்டு ஆசாமிங்க கம்பும் கழியுமா காருக்குக் குறுக்கே வந்து வழிமறிச்சுட்டாங்களே, பாாக்கலாம். எனக்கு எப்படி இருக்கும்? காரெல்லாம் சோதனை போட்டாங்க, கடைசியிலே பணப்பையை எடுத்துப் பார்த்துட்டு,

'சரி; போகலாம்'னுங்க. யாருடான்னு விசாரிச்சா புரொகி பிஷன் செக்கிங் போலீஸ் மப்டியிலே வந்திருக்கோம்னு சொல் றுங்க" என்பான்.

கடைசியில், ஒன்றுமே நடந்திருக்காது. அவ்வளவும் கனவிலே கண்டிருப்பான்.

காலையிலே பத்திரிகைகளில் வரும் அக்கப்போர்களையெல் லாம் ஒன்றுவிடாமல் படித்துவிட்டு அவற்றுக்குக் காது மூக்கு வைத்துப் பயங்கரமாகச் சிருஷ்டித்து நாலுபேரிடத்தில் சொல்லாவிட்டால் அவனுக்கு நிம்மதி ஏற்படாது.

யாராவது ரோடிலே ஒரு நாலணாவைத் தொலைத்து விட்டிருப்பார். அந்தச் செய்தி சொக்கப்பனின் காதுக்கு எட்டும். அவ்வளவுதான்; சொக்கப்பன் தனக்குத் தெரிந்தவர் கள் வீட்டுக்கெல்லாம் போய், "சார் துரைசாமி இன்னிக்கு நடு ரோடிலே நாலாயிரம் ரூபாயைத் தொலைச்சுட்டான். சார்!" என்பான். அதே செய்தியை அடுத்தவரிடம் போய்ச் சொல்லும்போது நாற்பதாயிரம் என்பான், அதற்கடுத்த வரிடம் போகும்போது அதுவே நாலு லட்சமாகிவிடும்!

உலகமே பிரளயத்தில் மூழ்கிவிடப் போவதாகப் போன வருஷம் ஒரு பெரிய வதந்தி அடிப்பட்டுக் கொண்டிருந்த தல்லவா? அந்த வதந்தியை அத்தனை பயங்கரமாகப் பரப்பி யவனே அக்கப்போர் சொக்கப்பனாய்த்தான் இருக்கவேண்டும்.

# ஆராய்ச்சி ஆர். வி. ராமன்

"அது ஒரு கிராக்கு சார்; ஆராய்ச்சி பண்றதாம் ஆராய்ச்சி! எப்பக் கண்டாலும் வீட்டு நிறைய தழை, புல்லு, பூச்சி இதையெல்லாம் குவிச்சு வெச்சுண்டு பூதக்கண்ணாடியிலே பார்த்துண்டிருக்குது. வேளையிலே சாப்பிடறதில்லே. ராத்திரியெல்லாம் தூங்கறதில்லே. ஏதோ பெரிசா புரட்டிடற மாதிரி ஆகாசத்தை வெறிச்சு வெறிச்சுப் பாக்கறது? இதான் அதுக்கு வேலை. எம்.ஏ. படிச்சிருக்கு; என்ன பிரயோஜனம்? ஒழுங்கா ஓர் உத்தியோகத்துலே சேர்ந்து குடியும் குடித்தனமுமா வாழக் கூடாது? மனைவியை மாமனார் வீட்டிலேயே விட்டு வைத்துட்டு காடு மலையெல்லாம் அலைஞ்சுண்டிருக்குது. கேட்டால் 'ரிஸர்ச்' பண்றதாம். ஏதோ பெரிசா கண்டு பிடிச்சுடப் போறதாம். மனசிலே ஐன்ஸ்டீன், சி.வி. ராமன்னு நினைப்பு! அதுக்காக ஆர். வெங்கட்ராமன்கிற தன் பெயரை ஆர். வி. ராமன்னு சுருக்கி வைத்துக்கொண்டிருக்கிறது.

"ஒரு நாளைக்கு என்ன செஞ்சுது தெரியுமோ? காட்டிலே இருக்கற 'மருதாணி'த் தழையையெல்லாம் வெட்டிண்டுவந்து ஆட்டுக்கல்லுலே போட்டு அரைச்சிண்டிருந்தது.

"இதெல்லாம் என்னடான்னு கேட்டேன். அந்தக் கிராக் சொல்றது : மருதாணியை மாவா அரைச்சு உலர்த்திப் பவுடர் பண்ணி அதை க்யூடெக்ஸுக்குப் பதிலா உபயோகப் படுத்தறதுக்கு ஆராய்ச்சி நடத்திண்டிருக்கானும். அதை வெளிநாட்டுக்

கெல்லாம் அனிப்பிச்சா லட்சம் லட்சமாப் பணம் வருமாம். டாலர் எர்னிங் பிஸினஸாம்! எப்படியிருக்கு பார்த்தயோன்னோ இதும் புத்தி? இது உருப்படுமான்னு கேக்கறேன்.

"இதுக்கு முன்னே ஒருதடவை இப்படித்தான் இன்னோர் ஆராய்ச்சி நடத்திண்டிருந்தது. என்னடா இதெல்லாம் சுத்தப் பைத்தியக்காரத்தனமா யிருக்கேன்னேன். 'உனக்கு ஒண்ணும் தெரியாது, மாமா! இது மட்டும் ஸக்ஸஸ் ஆகாட்டா என் நாடியை எடுத்துடறேன் பாருன்'னு சபதம் பண்றது!

"இது தாடியை எடுத்தால் தேவலையா? எடுக்காட்டாத் தேவலையா? ஒரு நாளைக்குத் தாடி வெச்சுண்டு வரும். இன்னொரு நாளைக்குத் தாடியை எடுத்துட்டு வரும். இதுதான் சுத்த பையித்தியமாச்சே!

"முன்னே ஒருதடவை ஊரிலே இருக்கிற பழைய 'பியூஸ்' போன பல்பெல்லாம் தெருத் தெருவா அலைஞ்சு விலைக்கு வாங்கிக்கொண்டு வர ஏற்பாடு பண்ணித்து.

"ஏதாவது பழைய 'பல்ப்' வியாபாரம்தான் பண்ணப் போறதோன்னு நினைச்சேன். இது என்ன பண்ணித்து தெரியுமோ? லட்சம் பல்பு சேர்ந்தப்புறம்தான் ரகசியத்தை வெளியே விடுவேன்னுது.

"கடைசியா ஓர் அமாவாசை அன்னிக்கு இருபது முப்பது பேரை அழைச்சுண்டு எங்கேயோ நடுக்காட்டிலே போய் அங்கே பறக்கிற மின்மினிப் பூச்சியெல்லாம் புடிச்சிண்டு வந்து காலி பல்புகளில் அடச்சு மூடிட்டுது. 'மாமா! மின்சாரமில்லாமலேயே எரியக்கூடிய மின் விளக்குகளைக் கண்டுபுடிச்சுட்டேன் இத பாரு'ன்னு மின்மினிப் பூச்சியை அடைச்ச வெச்ச பல்பைக் கொண்டுவந்து காண்பிக்கிறது.

"ஏண்டா, பூச்சி செத்துப்போயிட்டா என்னடா பண்ணு வேன்னேன்? இந்தியாவிலே மின்மினிப் பூச்சிக்குப் பஞ்சமே கிடையாது. எவ்வளவு வேணுமானாலும் கிடைக்கும். அப்படியே கிடைக்காவிட்டாலும் பட்டுப்பூச்சிகளை உற்பத்தி பண்ற

மாதிரி மின்மினிப்பூச்சிப் பண்ணை ஒன்று நடத்தி உற்பத்தி செய்துக்கலாங்கறது.

"ஏண்டா உனக்கு தலையெழுத்து! ஒழுங்கா ஒரு வேலைக்கு போயேண்டா'ன்னு, 'உனக்குத் தெரியாது, மாமா! இது மட்டும் ஸக்ஸஸ் ஆச்சுன்னு லட்சம் லட்சமாப் பணம் புரளுங்' கறது.

"ஒரு மாசம் கழிச்சு புதுசா இப்ப என்னடா ஆரம்பிச் சிருக்கேன்னு கேட்டேன்.

"மாமா! என்கூட ஒரு ஆறு மாசம் மலபார்லே வந்து இருக்கயா?'ன்னன்.

"மலபார்லே என்னடா ஆராய்ச்சின்னேன்? அங்கே வாழைத்தோப்பெல்லாம் காண்ட்ராக்ட் எடுக்கப்போறானும். வாழைப்பழங்களையெல்லாம் உரித்து வெயிலில் உலர்த்தி பவுடராப் பண்ணி டப்பாவில் அடைத்து அமெரிக்காவுக்கு அனுப்புவானும். அந்தப் பவுடர்லே அவங்க தண்ணியைத் தெளிச்சா பழப்பவுடர் மறுபடியும் வாழைப்பழமாக மாறிவிடு மாம்.இப்படி ஒரு திட்டம் வெச்சிருக்கேன்னு பயமுறுத்தறான்.

"இதைப்போல இன்னும் என்னென்னவோ ஐடியாவெல் லாம் இருக்காம் அவனிடம். ஒரு நாளைக்கு எருக்கஞ்செடி பக்கத்திலே போய் உட்கார்ந்துண்டிருந்தது. ஏன் தெரியுமோ? அந்தச் செடியிலேருந்து பஞ்சு வெடிச்சு வருமாம். அந்தப் பஞ்சுலேருந்து ரேயான் நூல் மாதிரி தயார் செய்து, அதுக்கு 'எருக்ரேயான்'னு பேர் வைக்கப்போறானும். இதன் ஐடியா விலே எருக்கை வெட்டி அடிக்க!

"அப்பளத்து மாவில் கோந்தும், பாகும், மிளகுப்பொடி யும் கலந்து இண்டியன் சுயிங்கம் தயார் பண்றதுக்கு ஒரு திட்டமாம். குடமிளகாய்ச் செடிக்கு தேன் இஞ்செக்ஷன் பண்ணி ஸ்வீட் குடமுளகாய் செய்றதுக்கு ஒரு திட்டமாம்

"வீணாகப் போகும் ரம்பத்தூளை வஜ்ரத்தில் கலந்து மர அட்டைகள் செய்வதற்கு மற்றொரு திட்டமாம்! இப்படி ஆயிரம் திட்டம் வைத்திருக்குதாம்.

"திடீர்னு இப்போ, இருக்கிற குளத்திலேயெல்லாம் இறங்கி அங்கே இருக்கும் பாசியெல்லாம் வாரி வாரிச் சேகரம் பண்ணிண்டிருக்குது.

"இது எதுக்குடான்னு கேட்டேன். இது ஓர் ஆராய்ச்சி, மாமா! குளத்துப் பாசியைக் கொண்டுவந்து ஒரு தொட்டியிலே கொட்டி மூடிவைத்தால், அதிலே பூஞ்சக்காளான் பூத்து வருமாம். அதை வைத்துக்கொண்டு பெனிஸிலின் மாதிரி ஒரு பாசிலின் மருந்து கண்டுபிடிக்கப் போறானும். கான்ஸருக்கு இது கைகண்ட ஒளஷதமாம். இதுமட்டும் ஸக்ஸஸ் ஆயிடுத்துன்னு அவ்வளவுதான். இந்தியாவுக்கு வெளிநாட்டிலெல்லாம் ஓரே புகழ்தானும்! பாசிலின் கண்டு பிடிச்ச ஆர். வி. ராமனுக்கு பாரத ரத்னம் பட்டங்கூடக் கிடைக்குமாம்.

"ஜவ்வாது மலைக்குப்போய் அங்குள்ள வாசனையெல்லாம் திரட்டி அதை மாத்திரைகளாக உருட்டிண்டு வரப்போறானும். அணுப்பிரமாணம் உள்ள அந்த மாத்திரையைச் சாக்கடையிலே போட்டால் சாக்கடை நாற்றமெல்லாம் அப்படியே பறந்து போய்விடுமாம். சாக்கடைத் தண்ணியும் ஸ்படிகம் மாதிரி சுத்தமாயிடுமாம். அதைக் கண்டு பிடிச்சுட்டால் எருமை மாடுகளெல்லாம் இறங்கிக் குளிக்கறதுக்குச் சாக்கடைத் தண்ணி இல்லாமல் போயிடுமேன்னுதான் யோசிக்கிறானும்! இதன் ஆராய்ச்சியிலே தீயை வைக்க!"

# 'துக்ளக்' துரைசாமி

அந்தப் பங்களாவுக்குள் ஒரு சமயம் தென்றல் வீசும். ஒரு சமயம் புயல் அடிக்கும். ஒரு நாள் பங்களாவைச் சுற்றிலு முள்ள தோட்டத்துச் செடிகளெல்லாம் 'குளுகுளு' வென்று பசுமையாகப் பூத்துக் குலுங்கும். இன்னொரு நாள் தோட்டம் முழுதுமே ஒரு செடிகூட இல்லாமல் வெட்டப்பட்டுப் படு சூன்யமாகக் காட்சி அளிக்கும்.

மேற்படி பங்களாவுக்குச் சொந்தக்காரரான 'துக்ளக்-துரைசாமி'யின் மனோபாவம் எப்படியெல்லாம் மாறுகிறதோ அப்படியெல்லாம் பங்களாவின் சூழ்நிலையும் அவ்வப்போது மாறிக்கொண்டிருக்கும்.

சிலசமயம் அவர் ஆனந்தத்தில் திளைத்திருப்பார். சில சமயம் கோபாவேசம் கொண்டு சிம்ம கர்ஜனை புரிந்து கொண்டிருப்பார்.

"யார்மீது கோபம்? எதற்காகக் கோபம்?" என்று ஒரு ஒருவராலும் ஊகிக்க முடியாது. 'எஜமானுக்குக் கோபம்.' அவ்வளவுதான் தெரியும் வேலையாட்களுக்கு.

துரைசாமி டெலிபோனை எடுப்பார். "ஹல்லோ கல்கத்தா!" என்று கல்கத்தாவைக் கூப்பிடுவார். கல்கத்தா கிடைத்ததும் ஆங்கிலத்தில் அதைச் சக்கைப்போடாகப் போட்டுக் கதிகலங்க அடிப்பார், அவருக்குக் கோபம் வரும்

போது இங்கிலீஷ் வார்த்தைகள் நீர்வீழ்ச்சிபோல் வந்து விழு கிற அழகு இருகிறதே. அது ஒன்றே போதும்!

டெலிபோனில் பேசி முடித்துவிட்டு அவர் மாடிப்படி களில் தடதடவென்று இறங்கி வரும்போது அந்தக் கட்டடமே கிடுகிடுக்கும்.

அப்புறம் ஒரு மணி நேரம் வரை அந்தப் பங்களாவில் ஒரு வித பயங்கர அமைதி நிலவும்.

எஜமானுடைய கோபம் அடங்கி அவர் சாந்தமாகப் பேசத் தொடங்கியதும், கடும் வெயில் வீசிய வான வெளியில் குளிர் நிலவு வீசத் தொடங்கியதுபோல் சூழ்நிலையோ அடியோடு மாறிவிடும். ஒரு சமயம் எரிமலையாகக் காட்சி அளிக்கும் துரைசாமி, ஒரு சமயம் பச்சை வாழைப்பட்டையாக மாறி விடுவார்.

அவருக்குக் 'குஷி' பிறந்துவிட்டாலோ சொல்லவேண்டிய தில்லை. 'எல்லோரும் இன்று இராத்திரி மொட்டை மாடியில் உட்கார்ந்து தமாஷாக 'மூன்லைட் டின்னர்' சாப்பிடலாமா?'' என்பார்.

''இன்றைக்கு அமாவாசை, நிலா இருக்காது'' என்று யாராவது ஞாபகப்படுத்தினல், ''அது எனக்குத் தெரியும்; மூன் இல்லாவிட்டால், மெர்க்குரி லைட்!'' என்பார்.

அவரிடம் எதுவும் நிரந்தரம் கிடையாது. சிவன்போக்கு சித்தன் போக்கு என்பார்களே, அப்படித்தான்.

ஒரு சீசனில் சிகரெட்டைப் புகைத்துக்கொண்டிருப்பார். இன்னொரு சீசனில் சிகரெட்டைத் துறந்துவிட்டு வெற்றிலை சீவலாகப் போட்டுத் துப்பிகொண்டிருப்பார்.

வைத்தியத்திலும் ஒரேமாதிரி சிகிச்சை இருக்காது. இன்று அல்லோபதி, நாளை ஹோமியோபதி, மறு நாள் வாசஸ்பதி! அதற்கு அடுத்த நாள் சீதாபதி! பேசும் பாஷையும் அப்படித் தான்.

ஒரு சீசனில் தோட்டத்தைப் பார்த்தால் இங்கிலீஷ் குரோட்டன்ஸாயிருக்கும். இன்னொரு சீஸனில் அதெல்லாம் போய்ப் புடலும் வாழையும், அவரையும், கீரையுமாய்க் காணப்படும்.

வேறொரு சீசனில் மறுபடியும் குரோட்டன்ஸாக மாறி அவற்றுக்கு மத்தியில் ஒரு துளசி மாடமும் காட்சி அளிக்கும்.

ஆங்கிலோ இந்தியப் பெண்மணி புடவை கட்டிக் கொண்டதுபோல் இரண்டும் கலந்த விசித்திரக் காட்சி!

உணவு வகையிலும் இத்தகைய கலப்புகள் உண்டு. ரொட்டிக்குச் சாம்பார்! தோசைக்கு ஜாம்! இட்லிக்கு பெப்பர் அண்டு சால்ட் பவுடர்!

ஒருநாள் பால்காரன் லேட்டாக வந்தான் என்பதற்காக அவன் மீது கோபித்துக்கொண்டு சொந்தத்தில் இரண்டு பசு மாடுகளை வாங்கிவிட்டார்.

முளைக்கீரை வளர்த்துப் பசுமாட்டை மேயவிட்டால், பாலில் 'கால்ஷியம் சத்து' அதிகமாகச் சேரும் என்று அவருக்குத் தெரிந்த வைத்தியர் ஒருவர் சொல்லிவிட்டார். அவ்வளவுதான்; அன்றே தோட்டத்திலிருந்த செடி கொடிகளை யெல்லாம் துளசி மாடம் உள்பட வெட்டி எடுத்துவிட்டு, தோட்டம் முழுதும் முளைக்கீரையாக விதைத்துவிட்டார். அந்த வைத்தியரையும் வீட்டோடு அழைத்து வந்து வைத்துக் கொண்டு முளைக்கீரை மேய்ந்த பசுவின் பாலினால் தயாரிக்கப் பட்ட காப்பியை வைத்தியருக்கும் கொடுத்துத் தாமும் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

ஒருநாள் சமையல்காரன் தோட்டத்தில் வளர்ந்திருந்த முளைக்கீரையைப் பிடுங்கி வந்து சமையல் செய்து விட்டான். அவ்வளவுதான்; துரைசாமிக்கு வந்து விட்டது கோபம்!

"மாட்டுக்கு வளர்த்த கீரையை என் உத்தரவு இல்லாமல் எப்படி சமையலுக்கு எடுத்து வரலாம்?" என்று ஆவேசம் வந்தவர்போல் பெருங் கூச்சலிட்டார். சமையல்காரன்

'டிஸ்மிஸ்' செய்யப்பட்டான். மூன்று நாள் ஓட்டலிலிருந்து சாப்பாடு வரவழைக்கப்பட்டது. கடைசியில் துரைசாமிக்குக் கோபம் தணிந்ததும், "சமையல்காரனை எங்கிருந்தாலும் தேடி அழைத்து வரவேண்டும்?" என்று ஓர் உத்தரவு போட்டார்.

"அவன் பம்பாய்க்கு போய்விட்டானும்" என்றார்கள்.

"பரவாயில்லை; உடனே யாராவது ப்ளேனில் புறப்பட்டுப் போய் அவனைக் கையோடு அழைத்துக்கொண்டு வரவேண்டும்" என்றார் துரைசாமி.

பாம்பாயில் தேடிப் பார்த்ததில் சமையல்காரன் அங்கு இல்லையென்று தெரிந்தது.

இவர் சமாசாரம் சமையல்காரனுக்குத் தெரியாதா என்ன? கோபம் தீர்ந்ததும் துரைசாமி எப்படியும் தன்னை அழைத்துப் போக ஆள் அனுப்புவார் என்று, அவன் சென்னை ஓட்டல் ஒன்றிலேயே தங்கியிருந்தான். கடைசியில், துரைசாமியின் ஆட்கள் சமையல்காரன் இருக்குமிடத்தைக் கண்டு பிடித்து அவனைக் கையோடு அழைத்து வந்தார்கள்.

"அந்த வைத்தியர் வீட்டை வீட்டுத் தொலைந்தால்தான் நான் வருவேன்" என்று ஒரு நிபந்தனை போட்டான் சமையல்காரன்.

"வைத்தியர் என்ன? மாடு, கீரை, பயிர் எல்லாவற்றையுமே தொலைத்துவிடுகிறேன். நீ வா" என்றார் துரைசாமி.

வைத்தியர் போனதும் சமையல்காரன் திரும்பி வந்தான். தோட்டத்திலிருந்த கீரைப் பாத்திகளையெல்லாம் மாற்றி மறுபடியும் குரோட்டன்ஸ் போட்டாயிற்று!

# 'வீட்டுக்கார' வெங்கடாசலம்

"என்னங்க, ஆறுமுகம் பிள்ளையா? வாங்க, வாங்க, எங்கே இப்படி இவ்வளவோ தூரம்? ஓகோ! புரசவாக்கம் வீட்டு விஷயமா வந்திங்களா? உங்களுக்குத் தெரிஞ்சவருக்கு யாருக்கோ வேணும்னு சொன்னீங்களே. நல்லது; அவரே எடுத்துக்கட்டும். கண்டிஷன்லாம் தெரியுமில்லே? மூணு மாசம் அட்வான்ஸ். வாடகை எழுபத்தஞ்சு ரூபா. இரண்டாந் தேதிக் குள்ளே வாடகை கரெக்டா வந்துடணும். ரசீது கொடுக்க மாட்டேன். எலெக்ட்ரிக்பில் தனி. செவத்துலே ஆணி அடிக்கக் கூடாது. கதவைப் 'படால் படால்'னு சாத்தக் கூடாது. தோட்டத்துலே செடி செட்டு போடக்கூடாது.

"என்னடா வெங்கடாசலம் இவ்வளவு கண்டிப்பா பேசறானே'ன்னு நினைக்கலாம். இந்த வீட்டுச் சமாசாரத்திலே அவ்வளவு கஷ்டப்பட்டுப் போயிருக்கேங்க நானு. அப்புறம் மனஸ்தாபம் ஒதவாது பாருங்க.

"'வெங்கடாசலமா! ஐயோ! அவன் பெரிய பேராசைக் காரன், சுத்தக் கருமி, அப்படி இப்படிம்பாங்க. சொல்றவங் களுக்கென்னங்க? நான் அநாவசியமாகக் காலணா செலவழிக் கவும் மாட்டேன். இன்னொருத்தர் சொத்துக்கு ஆசைப்படவும் மாட்டேன். எனக்கு எதுக்குங்க? என் சம்பாதனை எனக் கிருக்குது. சௌகார்பேட்டையிலே மூணு வீடு, திருவல்லிக் கேணியிலே இரண்டு வீடு. புரசைவாக்கத்திலே ஒரு வீடு

இருக்குது. எல்லாத்திலேயும் வாடகை வருது. பென்ஷன் வேறே வருது.

"இதுவரைக்கும் எங்க வீட்டுக்குக் குடிவந்தவங்க எல்லோரும் சொந்த வீடு கட்டிகிட்டுதாங்க போயிருக்காங்க. கடைசியா வந்த அந்த வக்கீல் ஒருத்தர்தாங்க வாடகையே குடுக்காமே என்னை ரொம்பக் கஷ்டப்படுத்திட்டாரு. வாடகை கேக்கப்போனா 'தோட்டத்துக் கதவு சரியில்லே. மழைநாள்ளே தாப்பாளே போடமுடியலே. வெய்யநாள்ளே காத்தே இல்லே குழாயிலே தண்ணியே வல்லே. அப்படி'ன்னு சும்மா ஏதாச்சும் குத்தம் சொல்லிக்கிட்டேயிருந்தாரு. அவருக்கு, அஞ்சாறு பசங்க. பசங்களா அதுங்க? வால் ஒண்ணுதான் பாக்கி அதுங்களுக்கு. வீட்டுக் கதவுகளை 'நாசனம்' பண்ணி வெச்சுட்டுதுங்க. செவுத்தெல்லாம் ஆணியாலே குத்தி குத்திப் பொளிஞ்சு வெச்சிட்டுதுங்க. எங்க கண்டாலும் மூட்டைப் பூச்சியை நசுக்கி, சுண்ணும்படிச்ச செவுத்தெல்லாம் பாழாக்கிட்டுதுங்க. கதவெல்லாம் படால் படால்னு அடிச்சு உடைச்சுட்டுதுங்க. கதவுன்னா எப்படிக் கதவுங்கறீங்க? இப்ப அந்த மாதிரி கதவு போடணும்னா நானூறு ஐந்நூறு ஆவுங்க. எல்லாம் ரங்கூன் டீக்கு. இப்ப என்ன வெலை விக்குது தெரியுமா? குழி அம்பது அறுவதுக்குக் குறைவில்லே! இதையெல்லாம் பாக்கறப்போ எனக்கு வயிறு எரிஞ்சுப் போச்சுங்க.

"என்னங்க? நீங்க சொல்லுங்க; குழாயிலே தண்ணி வல்லேன்னா என்னங்க? 'கிணறு' இருக்குது. தண்ணி கல்கண்டாட்டம் இருக்கும். அதுலே தண்ணி எடுத்துக்கோன்னேன். என்ன மாதிரி கிணறு தெரியுங்களா அது? குளமாட்டம் இருக்குங்க. ஒரு காலத்திலே அக்கம்பக்கத்து ஜனமெல்லாம் வந்து சேந்திக்கினு போவாங்க.

"கிணத்துலே சேந்த முடியாது. குழா ஹைட்லே இருக்குது; அதனாலே கீழே இறக்கி வைக்கணும்னான்.

"சரி; நீங்களே செலவு செஞ்சு குழாவைக் கீழே இறக்கிக்குங்க. ஆறசெலவை வாடகையிலே கழிச்சுக்கோன்'னேன்.

"அப்புறம், ஸீலிங் ஃபேன் போட்டுக்குடுங்க. காத்தே வரலேன்னு வாதாடினுன்" வக்கீல் பாருங்க!

"வெய்ய நாள்லே, பீச்சிலேயே காத்து வல்லயே, அதுக்கு என்ன செய்றதுன்'னேன். அதெல்லாம் முடியாதுன்றுன்.

"சரி; ஸீலிங்பேனும் வாங்கிப் போட்டுக்க; வாடகையிலே கழிச்சுக்கோ'ன்னேன். மழை நாள் வந்தது. தாப்பாள் சரியில் லேன்றுன். மழை பேஞ்சா இம்பீரியல் பாங்க் தாப்பாக்கூடத் தான் பிஞ்சுக்குது. வேணும்னு புதுத் தாப்பா ஒண்ணு வாங்கி போட்டுக்க! வாடகையிலே கழிச்சுக்கோன்னேன், அப்புறம் சமையல் ரூம்லே புகைபோக்கி இல்லே. வெச்சிக்குடுன்றுன். புகைபோக்கி வைக்கறதுன்னு சும்மாவா? அம்பது, நூறு யாரு கைவுட்டு வைக்கறது?

"புகை ஜன்னல் வழியாப் போயிடும். புகைபோக்கி வேணும்னேன். என்னங்க நான் சொல்றது? வேறே வழியில் லேன்னு புகை, ஜன்னல் வழியாப் போய்த்தானே ஆவணும்? அதுவும் முடியாதுன்னன். சரி; நீயே புகைபோக்கி ஒண்ணு கட்டிக்க. ஆற செலவை வாடகையிலே புடிச்சுக்கோன்னேன்.

"கடைசிலே என்ன பண்ணுன் தெரியுங்களா? வாடகையும் குடுக்காமெ, நோட்டீசும் குடுக்காமெ, வீட்டைக் காலி பண்ணிட்டுப் போயிட்டான். அது மாத்திரமா? கார்ப்பரேஷன் லேருந்து வீட்டு வரிகாரன் வந்தப்போ, 'வாடகை நூறுரூபாய் கொடுக்கிறேன். வீட்டுக்காரர் ரசீது கொடுக்கறதில்லே'ன்னு வேறே சொல்லிட்டுப் போயிட்டான். அதைக் கேட்டுக்கிட்டு கார்ப்பரேஷன்காரன் வீட்டு வரியை ஒசத்திட்டான். என்னங்க செய்யறது? இந்த வீடுங்களை வெச்சுக்கிட்டு ரொம்ப பேஜாரா இருக்குதுங்க. அரை வட்டிகூடக் கட்டலீங்க.

"அந்தப் புரசவாக்கம் வீடு என்னமாதிரி வீடு தெரி யுங்களா? வெய்ய நாள்ளே, வீட்டுக்குள்ளே உட்கார்ந்துட்டா சும்மா ஊட்டி மாதிரி ஜிலு ஜிலுன்னு இருக்குங்க.

"காலையிலே கிணத்து ஜலத்திலே நாலு வாளியைத் தூக்கித் தலைமேலே ஊத்திக்கிட்டு உட்கார்ந்துட்டாப் போதும் காத்துபாட்டுக்கு ஜிலு ஜிலுன்னு வீசிக்கிட்டிருக்கும்.

"என்னங்க, அந்த வக்கீல் மாதிரி ஆசாமிங்களா ரெக மண்ட் பண்ணிடாதீங்க. அப்புறம் அவஸ்தை! கண்டிஷனெலாம் ஞாபகம் இருக்குதுங்களா? அட்வான்ஸ் மூணு மாசம். வாடகை எழுபத்தஞ்சு ரூபா. ரசீது கிடையாது. எலெக்ட்ரிக் பில் தனி. கார்ப்பரேஷன்காரன் வந்தால் வாடகை நாற்ப துன்னு சொல்லணும். கதவைப் படால்னு அடிச்சுச் சாத்தக் கூடாது. ரங்கூன் டீக்; வெலை ஜாஸ்தி. செவத்திலே ஆணி அடிக்கக்கூடாது. மூட்டைப் பூச்சியை நசுக்கக்கூடாது. தோட்டத்திலே கீரை கொத்தமல்லி பயிரிடக்கூடாது. அந்த வேருங்க 'அஸ்திவாரத்துலே போச்சுன்னா கட்டடம் 'கிராக்' விட்டுப்போவும். குழாயிலே தண்ணிவல்லேன்னா கெணத்துலே தான் சேந்திக்கணும். தண்ணி கல்கண்டு மாதிரி இருக்கும். ஆமாம்; எல்லாத்தையும் முன்னாடியே சொல்லிட்டேன். முக்கியமா ரெண்டாந் தேதிக்குள்ளே வாடகை 'கரெட்டா' வந்துடணுங்க!"

# 'ஏமாளி' ஏகாம்பரம்

"ஏய் ஏகாம்பரம்! நாளைக்கு மார்னிங் மெட்ராஸுக்குப் புறப்படணும். மறந்துடப் போறே! ஓட்டல் ஏஷியாடிக்கிலே ரூம் புக் செஞ்சுக்கலாம். ஒரு வாரத்துக்குள்ளே மாம்பலத்திலே ஒரு தனி பங்களா பிடிச்சு போர்டை மாட்டிடுவோம். என்னடா முழிக்கிறே? பழி!" இது ஏகாம்பரத்தின் நண்பன் மயில்சாமி.

"எனக்கென்னமோ பயமா யிருக்குடா. சினிமா பிஸினஸ் எனக்குப் பழக்கமில்லையேன்னு யோசிக்கிறேன்" என்றான் ஏகாம்பரம்.

"அதுக்குத்தான் நான் இருக்கேனேடா! உனக்கென்ன பயம்? தைரியமாப் புறப்பட்டு வாடா..."

"பணத்துக்கு என்னடா செய்யறது?"

"மெட்ராஸிலே லாரி விற்ற பணம் முப்பதாயிரம் வரணும்னு சொன்னயே. அதை வசூல் செஞ்சுக்கறது. உன் பெரியப்பா கிட்டேயிருந்து இப்போதைக்கு ஓர் இரண்டாயிரம் வாங்கிக்கோ. மெட்ராசுக்குப் போனதும் லாரிப் பணத்தை வசூல் செய்துக்குவோம். ஒரு படத்துக்குப் பூஜையைப் போட்டு, ஆறாயிரம் அடிவரைக்கும் எடுத்துட்டா அப்புறம் நாலு டிஸ்ட்ரிபியூடர்களைப் பிடிச்சுப் பணம் பண்ணிடலாம்டா..."

"ஏண்டா, முப்பதாயிரம் போதுமாடா?"

"அடேயப்பா! அதை வெச்சுக்கிட்டு அசுவமேத யாகமே செய்யலாம். மெட்ராஸிலே படம். எடுக்கிறவங் களெல்லாம் முதல் வெச்சுகிட்டா ஆரம்பிக்கிறுங்க? எல் லாம் வெறுங்கையை முழம் போடறவங்கதாண்டா அதிகம்!"

"ஏண்டா! போடற பணம் திரும்பி வருமான்னு பய்மா யிருக்குடா!"

"நீ ஒரு பத்தாம் பசலிடா! கவலைப்படாதே! பிலிம் பிஸினெஸ்லேதாண்டா லாபமே அதிகம்!"

"நல்ல கதையா வேணுமே?"

"ஸ்டோரிக்கு என்னடா பஞ்சம்! தஞ்சாவூர் நஞ்சுண்டா ராவ் இல்லே? அதாண்டா டி. என். ராவ்! அவன்கிட்டே அரை டஜன் ஸ்டோரி இருக்குது. அவனுக்கு இருபத்தைந்து ரூபாய் அட்வான்ஸ் கொடுத்தா அரை டஜனையும் நம்கிட்டே கொடுத்துடுவான். நல்லதா ஒண்ணு செலக்ட் பண்ணிக் கிட்டாப் போச்சு!"

"சே பாவம்! எழுத்தாளர்களை ஏமாத்தக் கூடா துடா!"

"சரி; அப்ப அட்வான்ஸை அம்பதாக் கொடு."

"ஹீரோயின் யாரு?"

"அவதாண்டா, மிஸ் ஹேமலதா. அவளை நீ பார்த்த தில்லையே...'?

"அது யாருடா ஹேமலதா? பேரையே கேள்விப்பட்ட தில்லையே!"

"பெரிய ஸ்டாருடா. கண்ணம்மா பேட்டையிலேதான் இருக்கா. ரெண்டு மூணு படத்திலே குருப் டான்ஸிலே வந்திருக்கா."

"மயில்சாமி! ஹேமலதாவோடு நான் எப்படிடா பேசறது. வெட்கமாயிருக்குமே?"

"மண்டு மண்டு! புரொட்யூஸர்னு அவளே வந்து பேசுவாடா!"

மறுநாளே ஏகாம்பரம் தன் பெரியப்பாவிடம் ரூபாய் இரண்டாயிரத்தை வாங்கிக்கொண்டு நண்பனுடன் சென்னைக்குப் புறப்பட்டான். லாரிப் பணத்தை வசூல் செய்து மாம்பலத்தில் ஒரு வீட்டைப் பிடித்து அட்வான்ஸ் கொடுத்து ஏகாம்பரம் பிக்சர்ஸ் என்று போர்டையும் போட்டான். ஏகாம்பரந்தான் புரொட்யூஸர்! மயில்சாமிதான் புரொடக்ஷன் மானேஜர்! அவ்வளவுதான். மயில்சாமி சொன்ன போதெல்லாம் பணத்தை எடுத்தெடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்தான் ஏகாம்பரம்.

"ஏகாம்பரம்! இனிமே நீ இப்படியெல்லாம் இருக்கக் கூடாது. ஸில்க் ஜிப்பா, கழுத்திலே செயின், கையிலே சிகரெட் டப்பா. இதெல்லாந்தான் புரொட்யூஸருக்கு லட்சணம்."

"டேய், டேய் எனக்குச் சிகரெட் மட்டும் வேண்டாம்டா!"

"கண்ட்ரி! அது இல்லாட்டா இந்த பீல்டே உன்னை மதிக்காது."

மறுநாள் காலையில் மயில்சாமியும் ஏகாம்பரமும் பேபி டாக்ஸி ஒன்றை வாடகைக்குப் பிடித்துக்கொண்டு அதற்கு ஒரு ரோஜாப்பூ மாலையை வாங்கிப் போட்டனர். பல இடங்களுக்குப் போய்ச் சுற்றி அலைந்துவிட்டுக் கடைசியாகக் கண்ணம்மாப்பேட்டையை அடைந்தனர்.

மிஸ் ஹேமலதா ஏகாம்பரத்தின் எதிரில் வந்து நின்று வணங்கிவிட்டு மயில்சாமியைப் பார்த்து, "வாங்க அண்ணாச்சி!" என்றாள். அவள் புன்னகையில் மயங்கிய ஏகாம்பரம் ரூபாய் பத்தாயிரம் அட்வான்ஸ் கொடுத்து அவளை கதாநாயகியாக ஒப்பந்தம் செய்துகொண்டான்,

வசனகர்த்தா டி. என். ராவுக்கு ஐம்பது ரூபாய் அட்வான்ஸ் கொடுத்து 'அத்தைக்கு மீசை முளைத்தால்?' என்னும் ஒரு சமூகக் கதையை விலைக்கு வாங்கினான். அந்தத் தலைப்பு சரியில்லை என்பதற்காக 'வீட்டுக்கு ஒரு அத்தை!' என்று அதன் பெயரை மாற்றினான் மயில்சாமி. அதுவும் சரியில்லை என்று 'அத்தையின் வீடு' என்று மறுபடியும் அந்தப் பெயரை மாற்றிவிட்டார் டைரக்டர்.

படத்துக்குப் பூஜை போட்டாயிற்று. ஐயாயிரம் ரூபாயில் ஸெகண்ட் ஹாண்ட் கார் ஒன்றும் விலைக்கு வாங்கியாயிற்று. இதற்குள் ரூபாய் இருபத்தைந்தாயிரம் அவுட்டாயிற்று. ஏகாம்பரத்தின் கையிலிருந்த பணமெல்லாம் கரைந்துவிடவே மயில்சாமியைப் பார்த்து, "பணத்துக்கு என்னடா செய்வது?" என்று கேட்டான் ஏகாம்பரம்.

"கிண்டியிலே வாங்கித் தரேன் வாடா" என்று சொல்லி அவனை ரேஸுக்கு அழைத்துச் சென்றான் மயில்சாமி. ரேஸில் மேலும் இரண்டாயிரத்தைத் தொலைத்ததுதான் மிச்சம்.

ஏகாம்பரத்தின் பணம் அடியோடு தீர்ந்துவிட்டது என்று தெரிந்ததும் மயில்சாமி மாயமாய் மறைந்து விட்டான்.

'அத்தையின் வீடு' எடுக்கப்போன ஏகாம்பரம் ஹேமலதாவின் வீடே கதியாகிவிட்டான். அதுமட்டுமல்ல. அவளையே அவன் ரிஜிஸ்தர் விவாகம் செய்துகொள்ள வேண்டியதாகிவிட்டது.

இப்போது ஹேமலதா ஷூட்டிங்குக்குப் போகும் போதெல்லாம் பாவம், ஏகாம்பரமும் கூடவே போய்க் கொண்டிருக்கிறான். ஒருவேளை என்றாவது ஒரு நாள் ஏதாவது ஒரு ஸ்டுடியோவில் தன்னைப் போன்ற ஓர் ஏமாளியுடன் மயில்சாமியைச் சந்திக்கலாம் என்ற எண்ணம் தான்.

# 'ஆப்பக்கடை' அம்மாக்கண்ணு

"சீ! கய்தே, இன்னாடா அப்படிப் பாக்கறே, எரிச்சுடற மாதிரி. இந்த அம்மாக்கண்ணுகிட்டே வெச்சுக்காதே உன் வேலையெல்லாம். ஆப்பக்கரண்டியாலேயே ரெண்டு போட்டு டுவேன், ஆமாம். நெதம் நெதம் வந்து நாஷ்டா பண்ணிட் டுப் போனியே, அதைப்போல பாக்கியைக் குடுக்க புத்தி வாணாம்? அறிவு கெட்டவனே! பெரிய ஆம்பிளையாட்டமா மீசையை வச்சுக்கினு வந்துட்டான். வெக்கமில்லேடா உனக்கு?"

"மோவ், தாஸ்தி பேசாத மோவ்! பாக்கி வேணும்னா மரியாதையாக் கேட்டு வாங்கிக்கோ. நான் யார் தெரியுமா?"

"நீ யாராயிருந்தா எனக்கு இன்னாடா! பெரிய கவுணரா நீ! கயிதெ கெட்ட கேட்டுக்கு மருவாதையாம் மருவாதை! எத்தினி நாளாச்சு! மூஞ்சியைப் பாரு! துட்டை வச்சுட்டு ரிஸ்காவை இசுடா! கண் மறைவாவா சுத்திக்கினுக் கிறே?"

யாருக்கோ சவாரி போய்க்கொண்டிருந்தபோது அம்மாக்கண்ணுவின் திருஷ்டியில் எக்கச்சக்கமாக அகப் பட்டுக்கொண்டான் அந்த ரிக்ஷாக்காரன்! அம்மாக்கண்ணு குறுக்கே வந்து ரிக்ஷாவை மறித்து மடக்கிவிட்டாள். நாலு பேருக்கு முன்னால் ஒருவள் தன்னை அவமானப்படுத்தியதும்

அவன் கோபம் தாங்காமல் தன் இடுப்பில் செருகியிருந்த கத்தியை எடுத்துக் காண்பித்தான்.

"டேய், உன் கத்திக்குப் பயந்தவ இல்லேடா இந்த அம்மாக்கண்ணு. கயிதே! கஸ்மாலம்! காசைக் கீயே வெச் சுட்டுப் போவப் போறயா, இல்லாட்டி உன் தலையிலே நெருப்பை அள்ளிப் போடட்டுமா, அடத் தூ!" என்று வெற்றிலைச் சாற்றை அவன் மீது துப்பினாள்.

இதற்குள் அந்த ரிக்ஷாவைச் சுற்றிலும் பெரிய கூட்டம் கூடிவிடவே, வண்டிப் போக்குவரத்துக்கு இடையூறு ஏற் பட்டது. உடனே, போலீசார் வந்து அம்மாக்கண்ணுவைச் சமாதானப்படுத்தி ரிக்ஷாக்காரனிடமிருந்த பணத்தை வாங்கி அவளிடம் கொடுத்தனர். அப்புறம்தான் ரிக்ஷாவைப் போகவிட்டாள் அவள்.

கூவம் நதி வாராவதிக்கருகில் ஒரு கட்டைத்தொட்டி, அந்தக் கட்டைத் தொட்டிக்குப் பக்கத்திலுள்ள மரத்தின் கீழேதான் அவள் ஆப்பக்கடை போட்டிருந்தாள். எதிரில் ஒரு மலையாளத்தார் டீக்கடை. அதற்குப் பக்கத்தில் 'வாடகை ரிக்ஷாக்கள் நிற்குமிடம்' என்று ஒரு போர்டு. அந்தப் போர்டின் கீழ் நாலைந்து எருமை மாடுகள் படுத்துக் கொண் டிருக்கும்.

பொழுது விடிந்தால், அந்தப் பேட்டையிலுள்ள போலீஸ்காரர்கள், கைவண்டிக்காரர்கள், ஏழைகள், பிச்சைக் காரர்கள் எல்லோரும் 'நாஷ்டா'வுக்கு அம்மாக்கண்ணுவின் கடையைத்தான் நாடி வருவார்கள்.

புகையப் புகைய அவள் சுட்டுப் போடும் ஆப்பங்களைச் சாப்பிட்டுவிட்டுச் சிலபேர் காசு கொடுப்பார்கள். சில பேர் கடன் சொல்லிவிட்டுப் போவார்கள். ஆனல், அம்மாச் கண்ணுவை ஒருவரும் ஏமாற்ற முடியாது. நாஷ்டா பண் ணுகிற வேளையில் ஊர் அக்கப்போரெல்லாம் அங்கே பேசப் படும். அம்மாக்கண்ணுவும் அவ்வப்போது வெற்றிலைச்

சாற்றைத் துப்பிவிட்டு அவர்கள் பேச்சில் கலந்து கொள்வாள்.

போலீஸ்காரர்கள், கார்ப்பரேஷன் சுகாதார இலாகா சிப்பந்திகள் யாருமே அவளிடம் கொஞ்சம் மரியாதையாகத் தான் பேசுவார்கள். டாணாக்காரர்கள் யாராவது வந்தால், "இன்னா பல்லைக் காட்டறே? ஓசி நாஷ்டாவா?" என்பாள்.

கார்ப்பரேஷன் ஆள் வந்தால், "இங்கே ஓசிலே துண்ணுட்டுப் போயிடு. அங்கே போய் ஆப்பத்திலே ஈ மொய்க்குதுன்னு கேசு எழுதிடு. ஏன்யா! ஈ மொய்க்கிற ஆப்பத்தை நீ மட்டும் துண்ணலாமாய்யா?" என்று கேட்பாள்.

அம்மாக்கண்ணு தன் கடைக்கு வரும் வாடிக்கைக்காரர்களையெல்லாம் சொந்தக் குடும்பத்தாரைப் போலவே நடத்துவாள்.

வெளிப்பார்வைக்கு அவள் சற்றுக் கடுமையாத் தோன்றினாலும் இளகிய மனசு படைத்தவள். கஷ்டப்படுகிறவர்களுக்குத் தன்னை மீறியும் உபகாரம் செய்யும் குணம் அவளிடம் உண்டு.

"பாக்கி கொடுக்க முடியல்லேன்னு அதுக்காக ஏண்டா தலை தப்பிச்சுக்கினு திரியறே? பணம் கெடைக்கறப்போ கொடுக்கறது. நான் மாட்டேன்னு சொல்றேன்? இதுக்காவ 'நாஷ்டா' பண்ண வரதையே நிறுத்திடறதா? ஒழுங்கா வந்து சாப்பிட்டுக்கினு இரு" என்று சிலரிடம் அன்பொழுகப் பேசி அனுப்புவாள். அவளுக்கும் அடிக்கடி பணமுடை ஏற்படுவதுண்டு. அம்மாதிரி சமயங்களில் டீக்கடை மலையாளத்தாரிடமோ அல்லது கட்டைத்தொட்டி நாடாரிடமோ முப்பது நாற்பது கைமாற்றாக வாங்கிக் கொள்வாள். சொல்கிற 'கெடு'வில் அவர்களுக்குப் பணத்தைத் திருப்பியும் கொடுத்து விடுவாள். அப்படி முடியாத சமயங்களில் அவள் தன் காதிலுள்ள கம்மலைக் கழற்றிக்கொண்டுபோய் மார்வாடிக்கடையில் 'குதுவு' வைத்தாவது பணத்தைத் திருப்பிக் கொடுக்கத் தயங்கமாட்டாள்.

"இன்ஞெ நாடாரே, கொஞ்சம் கடையைப் பாரித்துக்க. கஞ்சித்தொட்டி ஆசுபத்திரி வரைக்கும் போயிட்டு வந்துட றேன்" என்பாள் அம்மாக்கண்ணு.

"ஆசுபத்திரியிலே இன்னும்மா வேலே உனக்கு" என்பார் நாடாரி.

"பிச்சைக்கார முருவன் இல்லே, முருவன் அதாம்பா இங்கே நெதைக்கும் வந்து ஆப்பம் சாப்பிடுவானே, அவன்."

"ஆமாம், அவனுக்கு இன்ஞெ?" என்பார் நாடார்.

"அவன் மேலே கார் மோதிடுச்சாம் பாவம்! ஆசுபத்திரி யிலே படுத்திருக்காணும். அவனேப் போய்ப் பாத்துட்டு ரெண்டு ஆப்பத்தையும் குடுத்துட்டு வந்துடறேன்" என்பாள் அம்மாக் கண்ணு.

"சரி, கொஞ்சம் பொயலே இருந்தா குடுத்துட்டுப் போ" என்பார் நாடார்.

"உக்கும், ஈர வெறவெல்லாம் வித்து துட்டை முடி போட்டு வச்சுக்கோ" என்று சொல்லிக்கொண்டே தன் இடுப் பிலுள்ள சுருக்குப் பையைத் திறந்து புகையிலேயை எடுத்துக் கொடுத்துவிட்டுப் போவாள்.

அம்மாக்கண்ணுவுக்குக் கொஞ்சம் சினிமாப் பயித்தியமும் உண்டு. மலேயாளத்தார் கடை மீது வாரா வாரம் சினிமா விளம்பர போர்டுகள் கொண்டு வந்து வைப்பதைப் பார்த்துக் கொண்டே இருப்பாள். அதற்காக மலேயாளத்தாருக்கு 'போர்டு பாஸ்' வரும் என்பதும் அவளுக்குத் தெரியும்.

"இன்ஞெ மலேயாளம்! சிவாஜி படம் வந்துருக்குதாமே? சினிமாவுக்கு ஒரு பாஸ் குடேன். பாத்துட்டு வரேன்" என்று மலேயாளத்தாரிடம் பாஸ் கேட்டு வாங்கிக்கொண்டு அவ்வப் போது சினிமாவுக்குப் போய் வந்துவிடுவாள்!

# 'ஜம்பம்' சாரதாம்பாள்

"சங்கரா!"—சாரதாம்பாளின் கம்பீரமான குரல் கேட்டுச் சமையல் கட்டிலிருந்து சங்கரன் ஒரு டம்ளர் சாத்துக்குடி ஜூஸுடன் ஓடிவந்தான்.

"இந்த டிரைவர் ஸ்டுடிபேகரை எடுத்துண்டு எங்கடா தொலைஞ்சான்?...'ரோமியோ'வை எங்கே காணோம்? ரெண்டு நாளா அதுக்கு உடம்பே சரியாயில்லையே?...மணி எட்டாகப் போகிறதே? சாமளா இன்னும் மாடியிலே தூங்கிண்டுதான் இருக்காளா? டான்ஸ் வாத்தியார் வந்து எத்தனை நாழியா காத்திண்டிருப்பார்? அவளுக்கு 'பெட் காப்பி' கொடுத்து எழுந்திருக்கச் சொல்லுடா. டெலிபோன் மணி அடிக்கிறது பாரு; அப்படியே யாருன்னு எடுத்துக் கேட்டுட்டுப் போ!"

"வெடர்னரி டாக்டர் வீட்டிலேருந்து டிரைவர்தான் பேசறும்மா! 'ரோமியோ'வை டாக்டர் கிட்டே காட்டினாும் அதுக்கு 'த்ரோட்'லே ஏதோ டிரபிளாம். நாலு நாளைக்கு அது 'ரெஸ்ட்' எடுத்துக்கணுமாம். அதிகமாகக் குரைக்கக்கூடா தாம்!" என்றான் சங்கரன்.

"உடம்பு சரியில்லாம இருக்கிறபோது பாவம், அதை ஏண்டா டாக்டர் வீட்டுக்கு அழைச்சுண்டு போனான்? போன் பண்ணினா டாக்டர் இங்கே வந்துட்டுப் போறார். சரி, அவனைச் சீக்கிரம் வரச்சொல்லு. 'ஷாப்பிங்' போகணும்!..."

சாரதாம்பாள் மூச்சு விடாமல் பேசிவிட்டு, சங்கரனிட மிருந்து சாத்துக்குடி ஜூஸை வாங்கி நாசூக்காக அருந்தினாள்

பிறகு இரண்டு மாத்திரைகளை எடுத்து வாயில் போட்டுக் கொண்டாள். அப்புறம் சாவகாசமாக ஒரு சோபாவில் போய் உட்கார்ந்துகொண்டு, தன்னுடைய இடது கை வைர வளையல்களை ஒரு தடவை பட்டுப் புடைவையின் தலைப்பால் துடைத்துவிட்டுக்கொண்டே, விரல்களிலுள்ள மோதிரங் களைத் திருப்பித் திருப்பி அழகு பார்த்துக் கொண்டாள்.

வைரத்தாலும் தங்கத்தாலும் இழைக்கப்பட்ட இரட்டை நாடி சரீரம். காஞ்சீபுரம் பட்டுப் புடைவை. பளபளக்கும் மேனி. பிரபல அட்வகேட்டின் சம்சாரமல்லவா? பேச்செல் லாம் கொஞ்சம் 'தோரணை'யாகவேதான் இருக்கும்.

தான் அந்த வீட்டில் கால் எடுத்து வைத்த பிறகுதான் தன் கணவருக்கு அதிருஷ்டம் ஏற்பட்டதென்பது அவள் நினைப்பு. அந்தப் பெருமை அவள் பேச்சில் அடிக்கடி பல்லவி போல் வந்துகொண்டேயிருக்கும். வெளியிலே போனால் தன் 'ஜம்பம்'தான். யாரைப் பார்த்தாலும் தன் குழந்தைகளின் பிரதாபந்தான். சங்கீதக் கச்சேரிக்குப் போனால் அமெரிக்கா வில் இருக்கும் தன் சின்னப்பிள்ளையைப் பற்றிப் பக்கத்தி லிருக்கும் அம்மாளிடம் 'போர்' அடிப்பாள். தன் பெண்ணை மணந்துகொள்ள ஐ. ஏ. எஸ். பையன்கள் 'க்யூ'வில் நிற்ப தாகச் சொல்லுவாள்.

"வரச் சொன்னீங்களாம்மா?" என்று கேட்டுக்கொண்டே வாசலில் வந்து நின்றான் ஆசாரி.

"ஆமாம்; இந்தக் காசுமாலையை அழிச்சு, கல் வெச்சு ஒட்டியாணமா செஞ்சுக் கொடுத்துடு. சாமளா டான்ஸ் அரங்கேற்றத்துக்கு உதவும். அதுக்குத்தான் கூப்பிட்டேன். அந்த ஜட்ஜ் வீட்டுப் பெண்ணுக்கு செஞ்சிருக்கே பாரு ஒரு ஒட்டியாணம், அதேமாதிரி மாடல்லே செய்யணும். தெரிஞ்சுதா...?"

இதற்குள் அல்சேஷனுடன் காரில் வந்து சேர்ந்தான் டிரைவர்.

"டிரைவர்! நாளைக்குக் கல்கத்தா போகணும். ஸ்டேஷனுக்குப் போய் மெயில்லே மூணு பஸ்ட் கிளாஸ் ஸீட் ரிசர்வ் பண்ணிண்டு வா..." இதற்குள் சாமளா ஓடிவந்து, "அம்மா, அம்மா, எனக்கு டென் ருபீஸ் வேணும். கான்வெண்ட்லே 'மதர்ஸ் டே'யாம்" என்றாள்.

"சரி, சங்கரன்கிட்டே வாங்கிண்டு போ! நாளைக்கு கல்கத்தா போகணும். ஸ்கூல்லே லீவு போட்டுட்டு வாடி!..."

அட்வகேட் கோர்ட்டுக்குப் புறப்பட்டுக்கொண்டிருந்தார். "நாளைக்குக் கல்கத்தா போகணும். டிக்கட் புக் பண்ணியாச்சு. அப்புறம் கேஸ் கீஸ்னு சொல்லாதீங்கோ..."

கல்கத்தாவில் அவள் தங்கையின் பெண்ணுக்குக் கலியாணம். கலியாணத்தில் எல்லோரும் சாரதாம்பாளையே வந்துவந்து விசாரித்துக்கொண்டிருந்தார்கள். "என்ன மாமி! சௌக்கியமா?" என்று கேட்டவர்களுக்கெல்லாம், "எனக்கு இந்தக் கல்கத்தா க்ளைமேட்டே ஒத்துக்கலே. கலியாணம் முடிஞ்சதும் மெட்ராஸுக்குப் போகணும்" என்று பதில் கூறிக்கொண்டிருந்தாள். தெரிந்தவர்களையெல்லாம் அருகில் அழைத்து ஒவ்வொருவரிடமும் தன்னுடைய பெருமையைச் சொல்லிக்கொண்டிருந்தாள். சாமளாவைக் காட்டி, "இவள் உங்க பெண்ணு?" என்று யாராவது விசாரித்தால், "ஆமாம்; டான்ஸ் கத்துண்டிருக்கா. கான்வெண்டிலே வாசிக்கிறா. அவளுக்கு இப்பத்தான் 'டான்ஸில்' ஆபரேஷன் ஆச்சு" என்பாள்.

"நீங்க காப்பி சாப்பிடலையா?" என்று கேட்டால், "நான் காப்பியே குடிக்கிறதில்லே. எனக்கு ஷுகர் இருக்காம் சாப்பிடக் கூடாதுன்னுட்டார் டாக்டர். அடிக்கடி பிளட் பிரஷர் வேறே அதிகமாயிடறது. வெயிலே தாங்க மாட்டேங்கறது. போன வருஷம் ஊட்டிக்குப் போயிருந்தேன். அதுக்கு முன் வருஷம் கோடைக்கானல். இந்த வருஷம் சிம்லாவுக்குப் போகணும்னு சொல்லிண்டிருக்கேன். அவரானால் டார்ஜீலிங் போகலாங்கறார்."

"யாருடீ நீ? சீதாவின் பெண்ணு? அடியம்மா! பெரியவளா வளந்துட்டியே, எங்கே? துர்க்காபூர்லயா இருக்கே? உன் ஹஸ்பெண்டுக்கு என்னடி வேலே? அவனே அழைச்சுண்டு வரது தானேடி? மெட்ராஸுக்கு வரப்போ லெட்டர் போடு. ஸ்டேஷ னுக்குக் கார் அனுப்பறேன்...இந்தப் பெண் யார் தெரியு மோன்னோ? என் அத்தானுக்கு அம்மாஞ்சியோட சித்தப்பா பெண், பாவம்; இதுக்குக் கலியாணம் பண்ண முடியாமல் ரொம்பக் கஷ்டப்பட்டுக்கொண் டிருந்தார். நான்தான் வரன் பார்த்துக் கொடுத்தேன். கலியாணத்தையே நான்தான் செய்து வைத்தேன். தூரத்து உறவுதான். ஆனாலும் விட்டுட முடியறதா? ஏண்டிம்மா, சௌக்கியமா இருக்கயா?"

"ஏன் மாமி, எப்ப மெட்ராஸுக்கு போகப் போறேள்?" என்று கேட்டாள் அந்தப் பெண்.

"நாளைக்கே போகவேண்டியதுதான். நாயைத் தனியா விட்டுட்டு வந்துட்டேன். அதுக்கு உடம்பு எப்படி இருக் கோன்னு ஒரே கவலையாயிருக்கு. 'பிளேன்'லேயே போயிட லாம்னு பார்த்தா, டாக்டர் என்னை பிளேன் டிராவல் பண்ணக் கூடாதுன்னு கண்டிப்பா சொல்லியிருக்கார்...எனக்கு பிளட் பிரஷரோன்னோ...!"

# 'பப்ளிசிடி' பங்காருசாமி

நிலைக்கண்ணாடிமுன் நின்றபடி தம்மை அழகு பார்த்துக் கொண்டிருந்தார் பங்காருசாமி. தலைப்பாகையிலும், அங்கவஸ்திரத்திலும் பளபளக்கும் சரிகை. 'பங்காருசாமி', 'பங்காருசாமி' என்று அங்கவஸ்திரத்தின் கரை முழுவதும் அவருடைய நாமதேயம் பளபளத்துக்கொண்டிருந்தது. இடது கையில் தங்கப் பட்டைக் கடியாரம். வாய் நிறையத் தங்கப் பற்கள். விரல்களிலே வைர மோதிரங்கள்.

"ஐயா, உங்க போட்டோவும் பெயரும் பேப்பர்லே வந்திருக்குது" என்று ஒரு பத்திரிகையை நீட்டினார் கார் டிரைவர்.

பங்காருசாமி தம்முடைய தங்கப் பற்கள் தெரிய, அந்தப் பத்திரிகையை ஆவலோடு வாங்கிப் பார்த்தார். அவருடைய 'போட்டோ'வும் பெயரும் அந்தப் பத்திரிகையில் வெளியாகியிருப்பதைக் கண்டபோது அவருக்கு ஆனந்தம் தாங்கவில்லை. அயல் நாட்டுக் கலைஞர் ஒருவர் விமான நிலையத்தில் வந்து இறங்கியபோது பங்காருசாமி அந்தக் கலைஞருக்கு மாலை போடுகிற போட்டோ அது. பிரபலஸ்தர்கள், சினிமா நட்சத்திரங்கள் இவர்களில் யாராவது வெளிநாட்டுக்குப் போனாலும், வெளி நாட்டிலிருந்து வந்தாலும் அவர்களை வரவேற்கவோ வழி அனுப்பவோ பங்காருசாமிதான் முதலில் ஆஜராவார். அவர்தான் மாலை போடுவார். அவர்தான் கை குலுக்குவார். மறுநாள் தாம் மாலை போட்ட செய்தி பத்திரிகையில் வந்திருக்

கிறதா என்று எதிர்பார்ப்பார். அச்சில் தம்முடைய பெயரைப் பார்ப்பதில் அவருக்கு அத்தனை ஆசை! அவருடைய கலியாணத்தின்போது முகூர்த்தப் பத்திரிகையில் அச்சடிக்கப்பட்டிருந்த தம்முடைய பெயரைப் பலமுறை பார்த்துப் பார்த்து மகிழ்ந்தவர் ஆயிற்றே அவர்?

ஒரு சங்கத்தின் ஆண்டு விழாவுக்கு மந்திரி ஒருவர் விஜயம் செய்தபோது, பங்காருசாமி ஆள்உயர மலர் மாலையை மந்திரியின் கழுத்தில் சூட்டினார். மந்திரியுடன் கை குலுக்கினார். ஆனால் குலுக்கிய கையை ஐந்து நிமிஷம் வரை விடாமல் பிடித்தபடியே போட்டோகிராபருக்குப் 'போஸ்' கொடுத்துக்கொண்டிருந்தார்! அந்த நேரத்தில் மந்திரி பாடு ரொம்பவும் அவஸ்தையாகப் போய்விட்டது.

ஊரில் யார் எந்தக் காரியம் செய்தாலும் பங்காருசாமிக்கு தூக்கம் வராது. தாமும் அதே காரியத்தைச் செய்து முடித்துவிட்டுத்தான் மறு காரியம் பார்ப்பார். அதற்காக எவ்வளவு பணம் செலவானாலும் அதைப்பற்றி அவருக்குக் கவலை கிடையாது. அவ்வுடைய பெயரும் போட்டோவும் பொது மக்கள் கண்களில் அடிக்கடி பட்டுக்கொண்டேயிருக்க வேண்டும் அதுதான் அவருடைய ஆசை.

கலியாண ஊர்வலம், சுவாமி புறப்பாடு என்றால் பங்காருசாமிதான் ஊர்வலத்துக்கு முன்னால் வருவார். இரு பக்கங்களிலும் காஸ் லைட்டுகள் ஒளி வீச, அந்த ஒளியில் அவருடைய வைர மோதிரங்கள் பளபளக்க நடந்து வருவார் அவர்.

வடக்கே யாரோ ஒரு பைராகிச் சாமியார் சகல வியாதிகளையும் குணப்படுத்துவதாகக் கேள்விப்பட்ட பங்காருசாமி, அந்தச் சாமியாரைத் தம்முடைய பங்களாவிலேயே அழைத்து வந்து வைத்துக்கொண்டார். "பங்காருசாமி பங்களாவில் பைராகிச் சாமியார் தங்கியிருக்கிறாராம்" என்று நாலுபேர் அவருடைய பெயரைச் சொல்லுவார்கள் அல்லவா?

ஒரு சமயம் அவர் தேர்தலுக்கு நின்ருர். பதினுயிரக் கணக்கில் பணத்தை அள்ளி வீசினுர். தம் பெயரையும் போட்டோவையும் பிரசுரித்துப் பிரபலப்படுத்தினுர். தேர்த லில் தோல்வி அடைந்தபோது அவர் சிறிதும் வருத்தப்பட வில்லே. தம்முடைய போட்டோவும், பெயரும் பத்திரிகைகளில் வெளியிடுவதற்குச் சந்தர்ப்பம் கிடைத்ததே, அது போதாதா?

ஒரு சமயம், ரயிலில் முதல் வகுப்பு வண்டியில் அவருக்கு ஒரு சீட் ரிசர்வ் செய்யப்பட்டது. கம்பார்ட்மெண்டுக்கு வெளி யில் ஒட்டப்பட்டிருந்த பெயர் ஜாபிதாவில் இவருடைய பெயரும் டைப் செய்யப்பட்டிருந்தது. பங்காருசாமி ரயில் ஏறும்போது ஞாபகமாகத் தம்முடைய பெயர் ஜாபிதாவில் இருக்கிறதா என்று பார்த்துக்கொண்டார். பெயர் இருந்தது; ஆனல் பங்காருசாமி என்பதற்குப் பதிலாகக் கங்காருசாமி என்று தப்பாக டைப் அடிக்கப்பட்டிருந்தது. உடனே தம் முடைய பெயர் தப்பாக இருப்பதை ரயில்வே அதிகாரிக்குச் சுட்டிக் காட்டி அதைத் திருத்தி எழுதிய பிறகுதான் அவர் ரயிலுக்குள் ஏறிச் சென்ருர்.

போட்டி அபேட்சகர் பஞ்சாட்சரம் ஒரு சமயம் தம் முடைய பேரக் குழந்தையை முதல் முதலாகப் பள்ளிக்கு அனுப்பியபோது, குழந்தையைக் குதிரை மீது வைத்து, பாண்டு வாத்தியம், நாதஸ்வரம் முழங்க ஊர்வலமாக அழைத்துச் சென்ருர். அந்த ஊர்வலம் பங்காருசாமியின் வீதி வழியாகப் போயிற்று. அவ்வளவுதான்; அந்தக் காட்சியைக் கண்டதும் பங்காருசாமிக்கு எங்கிருந்தோ ஒரு வேகம் பிறந்தது.

தமக்கு ஒரு பிள்ளேகூட இல்லேயே என்றெல்லாம் அவர் கவலேப்படவில்லே. தூரத்து உறவினர் ஒருவருடைய குழந் தையை அழைத்துவந்து காது குத்து விழா நடத்தினுர். அவர் வீட்டில் ஒரு விசேஷம் என்ருல் சொல்லவேண்டுமா, தடபுட லுக்கு? வாணவேடிக்கை, பாண்டு வாத்தியம், நாதஸ்வர இசை எல்லாம் சக்கைப்போடு போட்டன. குதிரைக்குப் பதிலாக யானேயையே ஊர்வலமாக விட்டார்.

யானை ஊர்வலம் என்றால் கூட்டத்துக்குக் கேட்க வேண்டுமா? அக்கம்பக்கத்துக் குடிசையில் வாழ்ந்த குழந்தைகளெல்லாம் யானையைச் சுற்றி வட்டமிட்டன. பங்காருசாமி மிக்க பெருமையோடு யானையின் முன்னால் நடந்து செல்ல ஊர்வலம் நகர்ந்துகொண்டிருந்தது.

திடீரென்று யானை மீதிருந்த குழந்தை பயந்துபோய்க் கீழே இறங்கவேண்டுமென்று அழுது பிடிவாதம் பிடித்தது. பங்காருசாமி கவலைப்படவில்லை. போட்டிக்கு ஊர்வலம் விட்டாகவேண்டும். அவ்வளவுதானே அவருடைய நோக்கம்? குழந்தை யாருடையதாயிருந்தால் என்ன? சுற்றி நின்ற குடிசை வாழ் குழந்தைகளில் ஒன்றைப் பிடித்து யானைமீது ஏற்றிவிட்டார். அந்தக் குழந்தை ரொம்பக் குஷியாக 'ஜம்'மென்று யானைமீது ஏறி உட்கார்ந்து சவாரி செய்தது.

யாரோ ஒரு சினிமா நட்சத்திரம் வீடு கட்டிப் புது மனை புகுவிழா நடத்தியதாகப் பத்திரிகையில் வெளியாகியிருந்த செய்தி பங்காருசாமியின் கண்ணில் பட்டுவிட்டது.

புதிதாக வீடு கட்டுவதென்றால் நாட்கள் ஆகுமே. எனவே, உடனே தாமும் ஒரு பழைய வீட்டை விலைக்கு வாங்கி விழா நடத்தினார். விழா முடிந்தவுடன் வீட்டை விற்று விட்டார் வீடு வாங்கியது விழா நடத்துவதற்குத்தானே? தங்கப் பற்கள் கட்டிக்கொள்வதற்காகத் தம்முடைய அசல் பற்களையே எடுத்தவருக்கு இது ஒரு பிரமாதமா என்ன?

# 'சிக்கனம்' சின்னசாமி

சைக்கிள் என்ற நாமதேயத்தில் உயிர் வைத்துக் கொண்டிருக்கும் அந்த ஜங்கமப் பொருளுக்குப் பச்சை வர்ணம் ஒரு கேடு!

பெடலின் வலது பாதம் தேய்ந்து மாய்ந்து கழன்று விட்டதால், அந்த நஷ்டம் மரக்கட்டையால் ஈடு செய்யப்பட்டிருந்தது. 'லொடக் லொடக்' என்று சத்தம் போடும் பல், ஆடிப் போன பெல். காயலான் கடை 'வா வா' என்று அழைக்கும் கிழடு தட்டிப்போன தோற்றம்.

'கர்க்க்...சர்க்க்...கிறீங்...சர்ர்ர்...!'—அந்தச் சைக்கிள் ஒரு தபாலாபீஸ் முன்னுல் போய் நிற்கிறது.

அதோ, அந்த அபூர்வ வாகனத்திலிருந்து கீழே இறங்கிச் செல்கிருனே அவன் வேறு யாருமில்லை, 'சிக்கனம்' சின்னசாமி தான்! வெளியே போகும்போது வரும்போதெல்லாம் போஸ்டாபீசுக்குள் நுழைந்து அங்கே சும்மா கொடுக்கப்படும் மணியார்டர் பாரத்தை வாங்கி வருவது அவன் வழக்கம்.

மணியார்டர் பாரத்துக்கு விலை கிடையாதல்லவா? இனமாக எது கிடைத்தபோதிலும் சின்னசாமி அதை விடமாட்டான். அது மட்டுமல்ல; மலிவாக எந்தப் பொருள் எங்கே கிடைத்தாலும் வாங்கத் தவற மாட்டான். அந்தப் பொருள் தேவைதாஞ, அவசியந்தாஞ என்பதைப்பற்றியெல்லாம் அவனுக்கு அக்கறை கிடையாது. எப்போதாவது

உபயோகப்படாமலா போய்விடும்? காயலான் கடையிலும், மூர் மார்க்கெட்டிலும் அவன் வாங்கி வாங்கிச் சேகரித்து வைத்துள்ள பொருள்களைக்கொண்டே ஒரு பொருட்காட்சி நடத்திவிடலாம். அந்தச் சைக்கிள்கூட, பல பாகங்களைத் தனித் தனியாக வாங்கி, ரிப்பேர் ஷாப்பில் கொடுத்து உருவாக்கப்பட்டதுதான்.

காலையில் எழுந்ததும் சின்னசாமி டி.யு.சி.எஸ். வாசலில் போய் உட்கார்ந்துகொண்டு, அங்கு வரும் தினப்பத்திரிகையை இலவசமாகப் படித்துவிட்டு, அப்படியே கறிகாய் மார்க்கெட்டுக்குப் போய் ஒவ்வொரு கடையாக, காய்களின் விலையை விசாரித்து வாங்கி வருவான். அன்று மார்க்கெட்டில் எந்தெந்தக் காய்கள் மலிவு என்பதைச் சுலபமாகத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் சின்னசாமி வாங்கும் கறிகாய்களிலிருந்தே தெரிந்துகொள்ளலாம்.

சின்னசாமி துணிகளைச் சலவைக்குப் போடமாட்டான். தானே துவைத்துத் தானே இஸ்திரி போட்டுக் கொள்வான். அந்த இஸ்திரிப் பெட்டிகூட அவனுடைய சொந்த 'மேக்' தான்!

மளிகைக் கடையிலிருந்து சாமான்கள் வாங்கி வந்தால் சாமான்கள் கட்டப்பட்டு வரும் காகிதங்களைக் கிழியாமல் மடித்து வைப்பதோடு சணல் கயிற்றையும் பத்திரமாகச் சுற்றி வைப்பான்.

தனக்கு வரும் தபால் கவர்களைக்கூட அவன் வீணுக்கு வதில்லை. உறைகளைப் பிரித்து அடுக்கி வைத்துக்கொண்டு அவற்றின் பின்பக்கத்தை குறிப்பு எழுத உபயோகப்படுத்திக் கொள்வான்.

ஞாயிற்றுக்கிழமை வந்தால் சின்னசாமியை ஏலக் கம்பெனி ஏதாவது ஒன்றில்தான் பார்க்கமுடியும். நூறு ரூபாய் பெறுமானமுள்ள பொருளை மிகத் துணிந்து ஐந்து ரூபாய்க்குக் கேட்பான். சில சமயம் அவன் கேட்கும் விலைக்கே அவை சல்லிசாகக் கிடைத்து விடுவதும் உண்டு.

தெருவில் போகும்போது அவன் ஆகாசத்தைப் பார்த்துக் கொண்டு போக மாட்டான். கீழே ஏதாவது கிடக்கிறதா என்றுதான் பார்த்துக்கொண்டு செல்வான். ஆணி, குடைக் கம்பி, இரும்புத் துண்டு எது கிடைத்தபோதிலும் அவற்றைப் பொறுக்கிப் பையில் போட்டுக் கொண்டுவந்து சேர்ப்பான்.

சின்னசாமி குற்றாலத்துக்குப் போகும் போதுதான் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்வது வழக்கம். காரணம், குற்றாலம் அருவியில் எண்ணெய் ஸ்நானம் செய்வதென்றால் சீயக்காய்த் தூளுக்குச் செலவு கிடையாதல்லவா?

சின்னசாமியிடம் வெகு காலமாக ஒரு பழைய டைம்பீஸ் இருந்தது. ரயில் தண்டவாளத்தில் வைத்து நசுக்கி மோட்சம் கொடுக்கவேண்டிய அந்த வஸ்துவை அவன் தானாகவே ரிப்பேர் செய்து எப்படியோ ஓட வைத்துவிட்டான்.

கடிகாரம் பழுது பார்ப்பதற்கு வேண்டிய உபகரணங்களை யும், கடியாரத்துக்கு வேண்டிய ஸ்பிரிங் முதலிய கருவிகளை யும் எங்கெங்கோ அலைந்து கடை கடையாகத் தேடி, பேரம் பேசி விலைக்கு வாங்கி வந்தான்.

ஒரு சனிக்கிழமை அந்தக் கடியாரத்தை அக்குவேறு ஆணி வேறாகப் பிரித்து எதிரில் பரப்பிக்கொண்டான். ஏதோ ஒரு ஸ்பிரிங்கை எடுத்து மாட்டினான். அதிலிருந்த பல் சக்கரங்களை கழற்றினான். வேறு இரண்டைப் பொருத்தினான். கடைசியில் பழையபடியே கடியாரத்தை மூடிச் சாவி கொடுத்து ஓட்டி னான். கடியாரம் ஓடத் தொடங்கிவிட்டது! ஆனால், என்ன ஆச்சரியம்! சாமான்களில் நாலு மிஞ்சிவிட்டன. அப்படியும் கடியாரம் மட்டும் ஓடிக் கொண்டிருந்தது! சின்னசாமிக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. சாமான்களிலும் நாலு மிஞ்சி, கடியாரமும் ஓடினால் மகிழ்ச்சி இருக்காதா?''

"ஜெர்மன் டைம்பீஸ்; இப்போதெல்லாம் இந்த மாடல் வருவது கிடையாது. விலை கொடுத்தாலும் கிடைக்காது" என்று பெருமையோடு சொல்லி மகிழ்ந்துகொண்டான் அவன்.

ஆனால், கொஞ்ச நேரத்துக்கெல்லாம் டைம்பீஸைப் பார்த்தபோது பெரிய முள் அப்பிரதட்சணமாகச் சுற்றிக் கொண்டிருந்தது!

மோட்டார் சைக்கிள் ஒன்றுக்கு இப்போது சாமான்கள் சேகரிக்கத் தொடங்கியிருக்கிறான். பழைய ஹாரன், பல்பு ஒன்று மூர்மார்க்கெட்டில் மலிவான விலைக்குக் கிடைத்து விட்டது. விடுவானா? இனி மற்ற பாகங்கள் கிடைக்கவேண் டியதுதான் பாக்கி!

சிக்கனம் சின்னசாமிக்குச் சிக்கனமாக இரண்டே குழந்தை கள்தாம். தீபாவளி வந்தால் அந்தக் குழந்தைகளுக்குப் பட்டாசு, மத்தாப்பு எதுவும் வாங்கித் தரமாட்டான். அடுத்த வீட்டுச் சிறுவர்கள் வெடிக்கும்போது தன் குழந்தைகளை அங்கே அழைத்துச் சென்று வேடிக்கை காட்டிவிட்டு வந்து விடுவான்!

அஸ்ஸாம் காடுகளில் மலிவாக யானை கிடைக்கிறது என்று யாரோ கூறினார்களாம். அஸ்ஸாமுக்குச் சைக்கிளிலேயே போய் யானையைத் தன் சைக்கிளின் பின்சீட்டில் உட்கார வைத்துக்கொண்டு வந்துவிடலாமா என்று இப்போது யோசித்துக் கொண்டிருக்கிறான்!

# 'பல்டி' பலராமன்

"ஹல்லோ, சந்தர்! நான் யார் தெரிகிறதாடா?... என்னடா முழிக்கிறே? இடியட்! என்னைத் தெரியலையா உனக்கு? நான்தாண்டா பலராம்!"—என் தோளைப் பிடித்து உலுக்கிக்கொண்டே ஏகவசனத்தில் தொடங்கிவிட்டான் அவன். என்பாடு சங்கடமாய்ப் போய்விட்டது.

என்னுடைய மனைவியுடன் அப்போதுதான் சினிமாவுக்குப் போய்க்கொண்டிருந்தேன். புறப்படும்போதே இப்படி ஒரு அபசகுணம்! அவனிடமிருந்து எப்படித் தப்புவது என்று யோசித்துக்கொண்டிருக்கும்போதே அவன் மேலும் ஆரம்பித்து விட்டான்.

"ஏண்டா, பழைய பிரண்டை இப்படியா மறந்துடறது? இது யாருடா? ஒய்பா? வெரிகுட்!...பலே ஆள்டா நீ; எப்படா கல்யாணம் ஆச்சு? ஏண்டா எனக்கு இன்விடேஷனை அனுப்பல்லே?"

"இரண்டு மாசம் ஆச்சு, உன் அட்ரஸ்ஸே தெரியல்லே! அதனாலே அனுப்பல்லே..." என்று இழுத்தேன்.

"என்னடா என் அட்ரஸ் தெரியல்லேங்கறே? எல். ஐ. சி. கட்டடத்திலேதானேடா இருக்கேன்! டாப் ப்ளோர்டா! நான் இப்ப ஓர் இன்ஷூரென்ஸ் ஏஜண்டு. போறது; கலியாணத்தைத்தான் ரகசியமா முடிச்சுட்டே; ஒருபதினாயிரம் ரூபாய்க்கு இன்ஷூராவது செய்துகொள்ளேன்" என்று அடி போட்டான்.

"ஆகட்டும் பார்க்கலாம். இப்ப நான் அவசரமா சினிமா வுக்குப் போயிண்டிருக்கேன். நாளைக்கு ஆபீஸ்பக்கம் வாயேன்: சாவகாசமாகப் பேசலாம்..." என்று தட்டிக் கழித்தேன்.

"நாளைக்கா? எந்த ஆபீசுடா உனக்கு?" என்று கேட்டான்.

"நான் இப்போ ஆடிட்டரா இருக்கேன். ஆபீஸ் ஆர்மீனியன் ஸ்ட்ரீட்லே" என்று கூறி விலாசத்தைச் சொல்லி விட்டு அந்த விடாக்கண்டனிடமிருந்து ஒரு வழியாகத் தப்பி னேன்.

அவன் அப்பால் போனதும் என் மனைவி, "யார் இந்தப் பைத்தியம்? நாகரிகமில்லாமல் நடுத்தெருவிலே நிற்க வைத்துக்கொண்டு..." என்றாள்.

"என் கிளாஸ்மேட்! அவன் ஒரு டைப். ஆனால் கவடு சூது கிடையாது. எதையும் ஸ்டெடியாச் செய்யமாட்டான். ஒரு நாள் இன்ஷுரென்ஸ் ஏஜண்டுன்னுவான்; இன்னொரு நாளைக்கு டூரிங் சினிமா மானேஜர் என்பான். ஒரு நாளைக்குக் காரிலேயே பறப்பான். இன்னொருநாளைக்கு நடந்தே சுற்று வான் ஒரு நாளைக்கு இங்கிலீஷிலேயே பிளந்து கட்டுவான். இன்னொரு நாள் இந்தியிலே வெளுத்துக் கட்டுவான். ஒரு நாள் குபேரன்: மறுநாள் அன்னக்காவடி. எதுவும் நிலை இல்லே" என்றேன்.

ஆறு மாதம் கழித்து மீண்டும் அவனைச் சந்தித்தேன், கூலிங் கிளாஸ். ஸில்க்ஜிப்பா. கையிலே ஒரு லெதர் பை. மூக்கின் கீழ் வண்டு போன்ற துண்டு மீசை; இம்மாதிரி அலங்காரங்களுடன் டாக்சியில் போய்க்கொண்டிருந்தான். என்னைக் கண்டுவிட்டு டாக்சியை நிறுத்திக் கணக்குத் தீர்த்து அனுப்பிவிட்டு, "ஹலோ சந்தர்!" என்று கத்திக் கொண்டே ஓடிவந்தான்.

'சரிதான் பத்தாயிரத்துக்கு ஒரு பாலிஸி எடுத்துக் கொண்டுவிட வேண்டியதுதான். காலைச் சுற்றிய பாம்பு

கடிக்காமல் விடாது' என்று பயந்தபடியே அவன் முற்றுகைக்குத் தயாரானேன்.

"என்ன பலராம்! எங்கே மறுநாள் வரேன்னு விலாசம் வாங்கிக்கொண்டு அப்புறம் வரவேயில்லையே?" என்றேன்.

"ஓ! அதுவா? அது என்னடா ஜாப்! ஸில்லி! எல்லாருக்கும் பல்லைக் காண்பித்துக்கொண்டு. நான்ஸென்ஸ்! அப்பவே அதை விட்டுட்டேன்!"

"விட்டுட்டாயா? அப்படின்னு இப்ப என்ன செய்யறே?"

"இப்ப ஒரு புரொட்யூசரைப் பிடிச்சு மாம்பலத்திலே 'ஹனிமூன் பிக்சர்ஸ்'ன்னு ஒரு படக் கம்பெனி ஆரம்பிச்சிருக்கேன். அதுலே நான் ஒரு பார்ட்னர்; இங்கிலீஷ் மர்டர் 'த்ரில்லரை' தமிழிலே அருமையான சோஷல் லவ் ஸ்டோரியா மாத்திருக்கேன். ஒண்டர்புல் ஐடியாவெல்லாம் போட்டிருக்கேன். வரப்போறது பாரேன். உனக்கு 'ப்ரீ பாஸ்' அனுப்பி வைக்கிறேன். ஒய்பையும் அழைச்சிண்டு வா!" என்றான்.

"படம் எடுத்தாயிடுத்தா?"

"இல்லேடா; அடுத்த வாரம்தான் பூஜை போடப் போறோம் ஸ்டார் புக்கிங் நடந்துண்டிருக்கு. வாடா எல்லாம் சொல்றேன்..." என்று கூறி என்னை ஏர்கண்டிஷன் ஓட்டல் ஒன்றுக்குள் அழைத்துச் சென்றான். ஒரே உற்சாகம்! லெதர்பாக்கில் கற்றை கற்றையாக நோட்டுகளைத் திணித்துக்கொண்டு உலகத்தையே விலைக்கு வாங்கிவிடுபவனைப் போன்ற பெருமிதத்துடன் காணப்பட்டான்.

"ஸாலட் சாப்பிடறயா!" என்றான்.

"வேண்டாம், காபி மட்டும் போதும்" என்றேன்.

"நீ ஒரு டல் பேர்வழிடா! ஹாப்பியா இருக்க கத்துக்கணும்டா? லைப் ஈஸ் பார் லிவிங்டா, இடியட்! ஸர்வர்! இரண்டு ப்ரூட் ஸாலட் கொண்டு வா" என்று கூறிக்கொண்டே வில்ஸ் ஃபில்டர் சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக்கொண்டு எனக்கும் ஒன்று கொடுத்தான்.

மீண்டும் ஆறுமாதம் கழித்து வந்தான்.

"என்னப்பா, சந்தர்!" என்று ஈன சுரத்தில் ஒலித்த பலராமன் குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன்.

தாடியும் மீசையும் வளர்ந்து ஏதோ முற்றும் துறந்த முனிவர்போல் காட்சி அளித்தான். 'ஹல்லோ'வெல்லாம் போய் 'அப்பா'வில் வந்துவிட்டது. கழுத்திலே துளசி மாலை! முகத்திலே வேதாந்தக் களை!

"என்ன பலராமா! இது என்ன வேஷம்? இப்ப எங்கே இருக்கே? உன் சினிமாக் கம்பெனி என்ன ஆச்சு?" என்று கேட்டேன்.

"அது அப்போதே 'திவால்'! சினிமா சுத்தப் பிராடுப்பா. இதெல்லாம் எனக்குச் சரிப்படலே. ரிஷிகேசம் போய் ஆறு மாசம் இருந்துட்டுப் போனவாரம்தான் வந்தேன், இப்போ சுவாமி துக்கானந்த தீர்த்திடம் சீடனுயிருக்கேன். ஆப்டர் ஆல் லைப் ஈஸ் நத்திங்; கீதையிலே கிருஷ்ண பரமாத்மா என்ன சொல்லியிருக்கிறூர், பார்த்தாயா? அர்ஜுனு சோர்வடையாதே! சுற்றம் அது இது என்று பார்க்காதே! கர்மா தான் முக்கியம்னு சொல்றூரே. எனக்கு யார் இருக்கா? பெண்டாட்டியா? பிள்ளையா? ஒண்டிக்கட்டை! ஏகாங்கி, எங்கே இருந்தா என்ன...சந்தர் ஒரு நாலணு இருந்தாக் கொடு. காலையிலிருந்து காப்பிகூடச் சாப்பிடல்லே!" என்றூன்.

சமீபத்தில் ஒருநாள் மூர்மார்க்கெட் பக்கம் போய்க் கொண்டிருந்தேன்.

"கபர்குத் கபாஹை! அதாவது இப்போது இமாசல் பாபா என்ன சொல்கிறூர் என்றூல்...—" என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்க்கிறேன், நம்ப பலராமன்! விஷக்கடி மருந்து வியாபாரி ஹிந்தியில் சொல்லிக் கொண்டிருந்ததைத் தமிழில் அவன் அநாயசமாக மொழி பெயர்த்துக்கொண் டிருந்தான்.

# 'டவாலி' ரங்கசாமி

"வா ஸார்! எங்கே ஸார் ரொம்ப நாளா காணோம்? கலெக்டரையா பார்க்கணும்? தாராளமாப் போய்ப் பாரு ஸார்...இது இன்னு பேஜார் புடிச்ச பொளைப்பு! அந்தக் காலம் போல வராது ஸார்! என் காலத்திலே எத்தினி கலெக்டருங்களை பார்த்திருப்பேன்! நெல்சன்துரை, ஸ்டோன் துரை, எமர்சன் துரை, நார்ட்டன் துரை, ஆலிவ் துரை!

"எம்டன் குண்டு போட்டான் பாரு, ஸார்! அப்ப எமர்சன் துரை குதிரை மேலே பரங்கிமலைக்குப் போறான். நான் தொரை சானி அம்மாளை இட்டுக்கினு பங்களூருக்குப் போறேன். ஏன்? நாய்க்குட்டி புடிச்சாற. துரைசானி அம்மாளுக்கு என் மேலே உசிரு, ஸார். 'ரங்ஸாம் ரங்ஸாம்'னு ஓயாமெ கூப்பிட்டுக் கிட்டேயிருக்கும்.

"அது என்னைத் தொட்டுத் தொட்டுப் பேசும். 'ஓல்ட்மேன்'னு எங்கிட்டே ஒரு பிரியம் ஸார் அதுக்கு! அவ்வளவுதான்.

"பங்களூரிலே போய் 'ரங்ஸாம்! ஒயின் சாப்பிடறயா டா'ன்னு கேட்டுச்சு. அதுன்னு மாத்ரம் எனக்கு ரொம்ப இஷ்டம் ஸார்! பங்களூர் போனு 'அது' இல்லாம வரமாட்டேன். துரைசானி அம்மாதான் வாங்கிக் குடுக்கும். நான் செலவு பண்ண முடியுமா?

"இந்த மாதிரி எத்தினி தொரைங்க பாத்திருப்பேன்! எத்தினி தொரைசானிங்க பாத்திருப்பேன்! ஒவ்வொருத்தன் ஒவ்வொரு மாதிரி, ஸார். இப்பல்லாம் காலம் மாறிப் போச்சு,

ஸார்! வெள்ளைக்காரன் இருந்த வரைக்கும்தான் இந்த டவாலிங்களுக்கு ரெஸ்பெக்ட்! இப்ப ஜிப்பா போட்டுக்கினு 'சஜி'யா கலெக்டரா வந்துடறாங்க. கலெக்டரும் ஜிப்பா, குமாஸ்தாவும் ஜிப்பா, பாக்க வறவங்களும் ஜிப்பா!—ஆனை குதிரை எல்லாம் ஒண்ணாயிட்டுதே ஸார்? ஒரு மரியாதை வாணும் ஸார்? இன்னு பேசாமே நிக்கறியே, நீ சொல்லு ஸார்! அதுதான் போவுதுன்னு கண்ட 'சோக்ரா' பசங்கனெல்லாம் 'டவாலியா' வந்துடறானுவ. இங்கிலீஷ்கூடச் சரியாப் பேசத் தெரியல்லே இவனுங்களுக்கு? இன்னு பசங்க, ஸார், இவன்க? நான் நல்லா இங்கிலீஷ் பேசுவேன்! நான் பேசறது தொரைக்கு புரியும். தொரை பேசறது எனக்குப் புரியும்!

"பஞ்சம் வந்தது பார் ஸார், பஞ்சம், அப்ப ஹறவ் தொரை தான் கலெக்டர். அவன் ஒரு கெடுபிடி ஆள். பங்கா இழுக்க ணும்பான். 'என்ன மேன் பட்டன்சுக்குப் பாலிஷ் போட லே'ம்பான். என் பட்டனுக்கு பாலிஷ் போடலேன்னு இவனுக்கு என்ன ஸார் வந்தது? ஐய, இப்படி எடுத்ததுக்கெல்லாம் ஆட்பூட் இம்பான், ஸார். நான் பயந்துக்க மாட்டேன். 'நீ போடா கொருங்கு மூஞ்சி'ன்னு தமிழ்லே திட்டிப் புடுவேன் ஸார். அவனுக்கு என்ன புரியப் போவுது?

"ஒருநாள் சொல்றான் ஸார், இங்கிலீஷ்லேதான்; 'இந்த லெட்டரைக் கொண்டுபோய் ஜோன்ஸ் தெரு ரோஸ்கிட்டே குடுத்திட்டு வா'ன்னு!' பிரிச்சுப் பாக்கறேன், லவ் லெட்டர்! முடியாதுன்னுட்டேன். என் டூடி இதுவா ஸார்? இவன் இன்னு செய்யமுடியும் என்னை!

"ஜோன்ஸ் தெரு ரோஸ் யார் தெரியுமா? ஆங்கிலோ இண்டியன்ஸ் பெண்ணு ஸார். இவனுக்கு வயசு பிப்டி ஆவுது. கடா மாதிரி. பாவம், அது ஒரு ஸ்டூடண்ட்ஸ் பொண்ணு, ஸார்! இவனுக்கு என்ன ஸார் அதுங்கிட்டே லவ்வு, கிளி யாட்டமா தொரைசானி இருக்கச்சே!

"நான் முடியாதுன்னேன் பாரு, அவ்வளாதான். கரம் வச்சிக்கினான் ஐயா! அண்ணிக்கிலேருந்து எம் மேலே பாஞ்சுக்கிட்டேயிருந்தான்.

"போடா, தொரை உன்னை தொலேச்சுடப் போருன்'னுன்; யாரு? பெருமாள் பையன். நான்தான் ஸார் அவனை பட்லர் வேலையிலே இட்டாந்து வெச்சேன். இங்கிலீஸூம் தெரியாது, எளவும் தெரியாது. 'மட்டன்'னு அது இன்னு டாம்பான். நான் கத்துக்குடுத்தேன் ஸார் அவனுக்கு.

"கேளு ஸார்! ஒருநா தொரை வேட்டா ஆபீசுக்கு வந்தான். வரலாமா, ஸார்! யார் கேக்கறது? அவன் கலெக்டரு!

"நான் என்னு செஞ்சேன்? அவன் மேஜையிலேருந்து ஒரு சிகரெட்டை எடுத்து, ஊதிக்கினு இருந்தேன். ரொம்ப நாளா சிகரெட் ஊதணும்னு ஆசை ஸார் எனக்கு. இத்தைப் பாத்துக் கினே வந்துட்டான் துரை. அவ்வளவேதான்; டேய்! உன்னை ஒன் மன்த் ஸஸ்பெண்ட் பண்ணியிருக்கேன். போடான்னுன்'— சரின்னு வூட்டுக்குப் போயிட்டேன். பத்து நாள்கூட ஆவல்லே. ஒரு நா வூட்டு முன்னுலே கயத்து கட்டில்லே குந்திக்கினு இருக்கேன். தொரை கார்லே வந்து நிக்கருன். பைலு ஏதோ ஆப்படல்லே. தேடித் தேடிப் பாத்திருக்கான். இந்த ரங்கசாமி இல்லாமே எந்த தொரை குப்பை கொட்டமுடியும்? ஒழிஞ்சு போருன்னு, போய் எடுத்துக் குடுத்தேன். 'நோ ஸஸ்பெண்ட்! நாளையிலேருந்து வேலைக்கு வரலாம்'னுன், ஸார். அப்புறம்தான் போனேன். இது இன்னு உத்தியோகம், ஸார். இது இல்லாட்டி எத்தினியோ இங்கிலீஷ் கம்பெனிலே வேலை 'ரெடி'யா இருக்குது ஸார், எனக்கு. ஸாண்டர்ஸ் துரைகிட்டே எத்தினி பசங்களுக்கு வேலை வாங்கிக் கொடுத்திருப்பேன் தெரியுமா?

"அதோ தெரியுது பார் கட்டடம். இன்னு தெரியுமா அது? புளிய மரம்! ஆமாம், ஸார்! நான் வேலைக்கு வரப்போ அங்கே ஒரு புளியமரந்தான் இருந்துது. அதுக்கு அஸ்திவாரம் வெட்டறப்போ நான் வேலைக்கு வந்து சேர்றேன். வுடு ஸார் அதெல்லாம்...நான் பார்க்காத வேலையா?...

"இப்ப இன்னு ஸார் டவாலி வேலை! அப்ப பார்க்கணும். எடுத்ததுக்கெல்லாம் துட்டுதான், ஸார்! நார்ட்டன் துரை

கப்பல் ஏறச்சே எனக்கு மூணு வெள்ளி சாஸரும் கப்பும் குடுத்துட்டுப் போனான். இன்னுங்கூட இருக்குது. 'டேய் ரங்ஸாம், சீமைக்கு வந்துடறயான்'னு கூப்டான். இவன்களுக் குத்தான் வேறே வழியில்லே. நாட்டை வுட்டு நாடு வந்தாங்க. நான் போவனா?

"இப்ப தமிழ் பேசறவங்கள்ளாம் கலெக்டராயிட்டப்பறம் ஒண்ணும் சொகம் இல்லே, ஸார்! முன் மாதிரி வரும்படியும் இல்லே. முன்னே துரையைப் பாத்துட்டு வெளியே வரவங்கள் ளாம் அநாவஷ்யமா ஒரு ரூபாயைத் தூக்கி எறிவாங்க, ஸார்! இப்ப எல்லாம் போச்சு, ஸார்! அதான் நயா பைசா கொண்ணாந்துட்டாங்களே. ஒரு நாளைக்கெல்லாம் அம்பது பைசாகூடத் தேறல்லே! நீ உள்ளே போய்வா, ஸார்! இப்பத் தான் கண்டவங்கள்ளாம் நுழையறான்களே...நீ போ ஸார், உன்னைச் சொல்லல்லே..."

# ஜானகி அம்மாள் ஹஸ்பெண்ட்

''சும்மாத்தானே இருக்கீங்க! பல்லாங்குழி ஆடலாம் வரேளா!'' என்பாள் ஸப்ஜட்ஜ் சாம்பசிவத்தின் சம்சாரம் ஜானகி அம்மாள்.

''கேசுகளைப் படிச்சு ஜட்ஜ்மெண்ட் எழுதி வைத்துட லாம்னு பார்த்தேன்...''

''பரவாயில்லை, ஞாயிற்றுக்கிழமையிலேகூட என்ன கோர்ட் வேலை வேண்டியிருக்கு? கொஞ்ச நேரம் பல்லாங்குழியோ, பரமபதமோ ஆடலாம், வாங்க'' என்பாள் ஜானகி அம்மாள். மனைவியின் உத்தரவுப்படி சாம்பசிவம் பல்லாங்குழி மணையையும் அதற்கு வேண்டிய காய்களையும் எடுத்துக்கொண்டு வந்து உட்காருவார்.

பல்லாங்குழி ஆட்டத்தில் தோல்வி சாம்பசிவத்துக்குத் தான்; காரணம் அவருக்கு ஆடத் தெரியாது என்பதல்ல. வெற்றியைத் தம் மனைவிக்கே விட்டுக்கொடுத்து அவளிடம் நல்ல பெயர் சம்பாதித்துக்கொள்ள வேண்டுமென்பது தான்!

திருமணம் ஆனதும் எல்லோரையும் போல் அவர் மனைவியைத் தம்முடைய வீட்டுக்கு அழைத்து வரவில்லை. அவள் பெரிய இடத்துப் பெண்ணாகையால் அவளைத் தம்முடைய வீட்டுக்கு அழைத்து வருவதற்குப்பதிலாக அவரே அவளுடைய வீட்டுக்குப் போய் 'மனைவிக்குப் புருஷ'னாக வாழ்ந்து வந்தார். ஊராருங்கூட சாம்பசிவத்தைப் பற்றிப் பேசும்போது 'ஜானகி

அம்மாள் ஹஸ்பெண்ட்' என்றுதான் சொல்லுவார்கள். தம்மை அவ்வாறு அழைப்பதில்தான் அவருக்கும் திருப்தி!

தம் மனைவியைப்பற்றியோ அவருடைய அதிருஷ்டத்தைப் பற்றியோ அவர் பேச ஆரம்பித்துவிட்டால் முகத்தில் பெருமை கூத்தாட மணிக்கணக்கில் பேசிக்கொண்டிருப்பார் அவர்.

"எல்லாம் அவளுடைய அதிருஷ்டம்தான், ஸார்! நான் என்ன செய்தேன்? வக்கீலுக்குப் படித்துப் பாஸ் பண்ணினேன். அவளுக்குத் தாலி கட்டினேன். அவ்வளவுதான்; படிப்படியா முன்னுக்கு வந்தேன். இந்த ஸப் ஜட்ஜ் உத்தியோகம், கார், பங்களா எல்லாம் அவள் அதிர்ஷ்டத்துக்கு ஏற்பட்டதுதான்" என்பார் மகிழ்ச்சியுடன்.

உத்தியோகத்தில் பணம் சேர்த்து, பங்களா கட்டியதும் அந்தப் புதிய பங்களாவுக்கு 'ஜானகி நிவாஸ்' என்று தம் மனைவியின் பெயரையே சூட்டினார்.

"ஜானகி! இன்றைக்குக் கோர்ட்டுக்கு எந்த டிரஸ் போட்டுக்கொண்டு போகட்டும்? ஜானகி, இன்றைக்கு எத்தனை மணிக்கு மாத்திரை சாப்பிடட்டும்?" என்று மனைவியின் அபிப் பிராயத்தைக் கேட்காமல் எதையுமே செய்ய மாட்டார். இப்படி எதற்கெடுத்தாலும் ஜானகி நாமஸ்மரணந்தான் அவருக்கு!

அந்தப் பங்களா வாசலில் பிச்சைக்காரர்கள் வந்தால், "ஐயா!" என்று அழைக்கமாட்டார்கள். "அம்மா, தாயே" என்றுதான் கூப்பிட்டுக்கொண்டு வருவார்கள். 'ஐயா' என்று கூப்பிடாமல் 'அம்மா' என்று கூப்பிடும் பிச்சைக்காரர்களை அவர் மனத்துக்குள்ளாகவே 'புத்திசாலிகள்' என்று எண்ணிப் பாராட்டுவார்.

யாராவது 'யாசகம்', 'டொனேஷன்' என்று வந்தால் சாம்பசிவம் அவர்களிடம் "அம்மாவைப் பார்க்க வந்தீர் களா? உள்ளே இருக்காங்க; போய்ப் பாருங்க" என்பார்.

கார் டிரைவர், அவரிடம் வந்து சம்பள உயர்வு கேட்டால், "போடா முட்டாள், அம்மாவைப் போய்க் கேளுடா" என்பார்.

சாம்பசிவத்திற்கு அந்த வீட்டைப் பொறுத்தவரையில் எந்த விவகாரமும் தெரியாது. எல்லாம் அந்த அம்மாளுடைய 'மானேஜ்மெண்ட்' தான்.

"என் 'ஒய்ப்' இருக்காளே, ரொம்ப சாமர்த்தியம். நாலாவது பாரம் வரை படிச்சிருக்காள். இங்கிலீஷிலே அட்ரஸ்கூட எழுதுவாள்; கேஸ் கட்டெல்லாங்கூடப் படிச்சு விஷயத்தைத் தெரிஞ்சுக்கிறுள். இன்னும் கொஞ்ச நாள் போனு ஜட்ஜ்மெண்டேகூட எழுதிவைத்து விடுவாள்போல் இருக்கிறது..." என்பார்.

"இன்றைக்கு ஓர் இடத்திலே கல்யாணம், போயிட்டு வருவோம், வறேளா?" என்பாள் ஜானகி அம்மாள். ஸ்ப்ஜட்ஜ் பதில் பேசாமல் மனைவியுடன் புறப்பட்டுச் செல்வார். கலியாண வீட்டில் எல்லாரும் ஜானகி அம்மாளைத்தான் விசாரிப்பார்கள். ஜானகி அம்மாள் தன் ஹஸ்பெண்டை எல்லாருக்கும் அறிமுகப்படுத்தி வைப்பாள். கலியாண வீட்டிலிருந்து மறுபடியும் வீடு திரும்பப் போகும் நேரம் சாம்பசிவத்துக்குத் தெரியாது, மனைவி எப்போது புறப்படப் போகிறுள் என்பதை தெரிந்துகொள்ள அடிக்கொரு தடவை மனைவி இருக்கும் திக்கை ஜாடையாக கவனித்துக் கொண்டிருப்பார். கடைசியில், "புறப்படலாமா? கார் டிரைவரைக் கூப்பிடுங்கோ" என்பாள் ஜானகி அம்மாள்.

"யாரது, உங்களைத்தானே, இன்றைக்குச் சபாவிலே சங்கீதக் கச்சேரியாம். போவோம் வறேளா?" என்பாள் ஜானகி அம்மாள்.

"சங்கீதமா? அதெல்லாம் எனக்கொண்ணும் அவ்வளவா தெரியாது..."

"பரவாயில்லே, வாருங்கோ, எனக்கு யாரும் துணை இல்லே..."

''சரி!'' என்பார் அவர்;

கச்சேரியில் போய் உட்கார்ந்துகொண்டு தம் மனைவி தலையாட்டுகிற இடங்களையெல்லாம் கவனித்து அந்த இடங்களில் தாமும் ரசிப்பதுபோல் பாவனை செய்வார்.

சாம்பசிவம் வீட்டில் எப்போதும் குழந்தைகளும் குட்டிகளும் ஜேஜே என்று இருக்கும். எல்லாம் ஜானகி அம்மாளின் உறவுக்காரர்கள்தான். சாம்சிவத்துக்குத் தம்முடைய உறவினர்களைத் தம் வீட்டுக்கு அழைத்துவரத் தைரியம் ஏது? மனைவி வகை பந்துக்களின் குழந்தைகள் அழுதால்கூட அவருக்குக் கோபிக்க உரிமை கிடையாது. குழந்தைகளின் தொந்தரவு அதிகமாகப் போனால், ''சும்மா இருக்கப் போகிறீர்களா? இல்லே, 'அம்மா'வைக் கூப்பிடட்டுமா?'' என்றுதான் மிரட்டுவார்.

''ஜானகி! இந்த வருஷம் ஸம்மருக்கு நாம் ஊட்டிக்குப் போகலாமா?'' என்று தயங்கியபடியே கேட்பார்.

''நீங்க ஒண்ணும் வேண்டாம்; உங்களுக்கு ஆஸ்துமா, உடம்புக்கு ஒத்துக்காது. இந்த வருஷம் நானும் என் தம்பியும் போயிட்டு வரோம். நீங்க பங்களாவைப் பார்த்துக்குங்க...'' என்பாள் அந்த அம்மாள்.

''சரி, நீ சொல்றதும் சரிதான். ஆஸ்துமா அதிகமாயிடுத்துன்னு யார் கஷ்டப்படறது? நான் பங்களாவைப் பார்த்துக்கறேன். நீ ஜாக்கிரதையாப் போயிட்டுவா. மப்ளர், பிளானல், சட்டை, போர்வையெல்லாம் ஞாபகமா எடுத்துக்கொண்டு போ'' என்பார்.

# 'அரசியல்' அண்ணுசாமி

காலைப் பத்திரிகையில் வரும் செய்திகளை ஒன்று விடாமல் படித்துவிட்டு மாலையில் கூடும் அந்தப் பார்க் பெஞ்சு மாநாட்டில் விஷயங்களை அலசிவிட்டுப் போனால்தான் அங்கே கூடும் 'பென்ஷன்'களுக்கெல்லாம் தூக்கம் வரும்.

"அண்ணுசாமி ஸார், வாங்க வாங்க. நீங்க இல்லாமல் கான்பரன்ஸே 'டல்' அடிக்கிறது. ஏன் லேட்?"

"இதென்ன கேள்வி? ஆபீஸ் விட்டதும் சர்க்கார் பஸ்ஸைன்னு பிடிச்சு வந்து சேரணும்? லேட்டாகாமல் என்ன செய்யும்?" என்று ஏதாவது குறை கூறிக்கொண்டே வந்து சேருவார் 'அரசியல்'அண்ணுசாமி.

அவர் வந்ததுமே கான்ஃபரன்ஸ் களை கட்டிவிடும்.

அண்ணுசாமி வரும்போதே சற்றுக் கடுகடுப்பாகத்தான் வருவார். உலகப் பிரச்னைகளையெல்லாம் எப்படித் தீர்த்துவைப்பது என்ற கவலை அவர் முகத்தில் பிரதிபலிக்கும். பெஞ்சு மீது அமர்ந்து ஒரு சிட்டிகையைத் தட்டி இழுத்துவிட வேண்டியது தான். நகரசபை நிர்வாகத்திலிருந்து ஐ.நா.சபை நடவடிக்கை வரை எல்லா விஷயங்களையும் மட்டைக்கு இரண்டு கீற்றாக வெளுத்து வாங்கிவிட்டுச் செல்வார்.

"திருச்சியிலே பார்த்தீங்களா? குழாய் தண்ணிக்குக் 'கியூ'விலே நிக்கறாங்களாம். பக்கத்திலே காவேரி ஓடறது-

என்ன பிரயோசனம்?'' என்று ஆரம்பிப்பார் ஒரு மப்ளர் ஆசாமி. அவ்வளவுதான்; அண்ணுசாமிக்கு எங்கிருந்தோ ஓர் ஆவேசம் பிறந்துவிடும்.

''இது என்ன அக்கிரமம், ஸார்? வெள்ளைக்காரன் காலத்திலே இப்படிக் கேள்விப்பட்டிருப்போமா? குடிக்கிற தண்ணிக்கு 'க்யூ' வாம்! இந்த அழகிலே காவேரி வாட்டரை மெட்ராஸுக்குக் கொண்டு வரப் போறுனும். பக்கத்திலே இருக்கிற திருச்சிக்கு வழியைக் காணும்!'' என்பார் அண்ணுசாமி.

''கிருஷ்ணு நதியைக் கொண்டுவரப் போறதா ஒரு 'ஸ்கீம்' இருந்துதே, அது என்ன ஆச்சு?'' என்று மெதுவாகக் காவேரியிலிருந்து கிருஷ்ணுவுக்குத் தாண்டுவார் சந்தனப் பொட்டுக்காரர்.

''ஸ்கீமுக்கு என்னங்காணும்? ஆயிரம் ஸ்கீம் போடலாம்! சி.பி.யும், சீனிவாசய்யங்காரும் போடாத ஸ்கீமா இவன் பெரிசா போட்டுடப் போறுன்? பணத்துக்கு ஒரு ஸ்கீமையும் காணும்! கன்னு பின்னுன்னு கடனை வாங்கி, தண்ணி இல்லாத இடத்திலெல்லாம் டாமைக் கட்டிண்டிருக்கான். கேட்டா, 'இண்டர்நேஷனல் ரிலேஷன்ஷிப்' புங்கருன். ஐக்கும், குருஷேவும் எதுக்குத் திருப்பி திருப்பி இந்தியாவுக்கு வந்துண்டிருக்கான் தெரியுமா? விஷயம் இருக்குன்னேன்! இண்டர்நேஷனல் ரிலேஷன்ஷிப்பாவது, கப்பலாவது? போகப் போகத் தெரியும், பார்த்துண்டே இரும். நான் இன்னிக்குச் சொல்றேன். குருஷ்சேவ் குடுமி சும்மா ஆடாதுய்யா, அசகாய சூரன்!''

''அதிருக்கட்டும்; எவரெஸ்ட் எவருக்கு சொந்தம்னு தீர்மானமாயிடுத்தா?''

''பரமசிவனுக்குத்தான்; போய்யா! ஒருத்தன் எவரெஸ்ட் என்னதுங்கருன், இன்னொருத்தன் காஷ்மீர் என்னதுங்கருன். அப்படிச் சொல்றவனையெல்லாம் அழைச்சுண்டு வந்து நாம் விருந்து வெச்சுண்டிருக்கோம். இதெல்லாம் டிப்ளமஸியாம். இந்த லட்சணத்திலே டிபன்ஸ் வேறே! டிபன்ஸ் மினிஸ்டர் வேறே!''

"ஆடிட் ரிப்போர்ட் சந்தி சிரிக்கிறதே, பார்த்தேளா?"

"வெட்கக்கேடு: வெளியே சொல்லாதேயும்! அட்மினிஸ் ரேஷன்லெ ஒரே ஊழல். இதுக்குள்ள நாலு பைனான்ஸ் மினிஸ்டர் மாறியாச்சு. நேரு ஒண்டி ஆள். வின்ஸியர் மேன்தான். அவர் என்ன பண்ணுவார், பாவம்? சுத்தி இருக்கறவா சரியாயில்லையே! ஸெண்டர்லே ஒரு பாலிஸின்னு ஸ்டேட்லே ஒரு பாலிஸி. ஒரு ஸ்டேட்லே ப்ரொகிபிஷன்ங்கறான். இன்னொரு ஸ்டேட்லே குடிக்கலாங்கறான். நம் ஊர் போலீஸ் குடிக்கிறவனையெல்லாம் விட்டுவிட்டு வெளியூர் லேருந்து வர பிரெடிரிக் மார்ச்சை அரெஸ்ட் பண்ணிண்டு இருக்கு. பிரெடிரிக் மார்ச் குடிச்சா என்ன? குடிக்காவிட்டா என்ன? அவனுக்காகவா புரொகிபிஷன் கொண்டு வந்தோம்? பர்ப்பஸையே மறந்துடறோம். இதைப்பத்தி நேருவே நன்னு டோஸ் கொடுத்திருக்கார் பார்த்தேளா? 'காமன்ஸென்ஸ்' இல்லேன்னு!"

"அது சரி; அசெம்பளிலே லாண்ட் ஸீலிங் அஞ்சு நாளா அமர்க்களப்படறதே!"

"நான் சொல்றேன், இதெல்லாம் டெமாக்ரஸியிலே ஒண்ணுமே நடக்காது, ஸார். இந்த கவர்மெண்டிலே எதையாவது உருப்படியாச் செய்ய முடியறதா பார்த்தேளா? எலெக்ஷனை எவன் நடத்தறான்; பணக்காரன்தானே நடத்தறான்!"

"ரிடயரிங் வயசை அம்பத்தஞ்சிலேருந்து அம்பத்தெட்டா பண்ண முடியலே. பென்ஷன் வரியை எடுக்க மாட்டேங்கறான். என்ன கவர்மெண்ட் வேண்டியிருக்கு? என்ன லாண்ட் ஸீலிங் வேண்டியிருக்கு? இதையெல்லாம் பார்த்தா கம்யூனிஸ்ட் கவர்ன்மெண்டே தேவலேன்னு தோண்றது.

"அதான் வந்துட்டிருக்கானே, சைனாக்காரன். மெதுவா பார்டர்கிட்டே வந்துட்டான். சூ என் லாய் வரான் பார்த்தயளா? வர சமயத்தைக் கவனிச்சயளா? அதுலேதான் இருக்கு

ஸீக்ரெட்! நாசர் வந்துட்டுப் போறதுக்கும் இவன் வரதுக்கும் சம்பந்தம் இருக்கய்யா. பஞ்சசீலம் பஞ்சசீலம்னு இருக்கிற தையெல்லாம் கோட்டைவிடப் போறேம்!''

''என்ன அண்ணுசாமி ஸார், ஏன், இப்படி எதுக்கெடுத் தாலும் கவர்ன்மெண்டை அட்டாக் பண்றேள்? சர்க்கார் என்னய்யா பண்ணும்?''

''என்ன பண்ணுமா! தட்டிக் கேக்கறதுக்கு ஓர் ஆள் இருந்தா இப்படி நடக்குமா? சோஷலிஸ்டிக் பாட்டனும் பேரனும்? என்னய்யா சோஷலிஸம் வேண்டியிருக்கு? சோத் துக்கு லாட்டரி அடிக்கிறேம். சோஷலிசம் பண்ருளாம்'' என்பார் அண்ணுசாமி.

''அதான் பெரியவர் ஆரம்பிச்சிருக்காரய்யா புது பார்ட்டி!''

''ஆமாம்; புது பார்ட்டி ஆரம்பிச்சு ஓயாமல் கவர்ன் மெண்டை கிரிடிஸைஸ் பண்ணிட்டா ஆயிடுத்தா? அப் கோர்ஸ், பெரியவர் இண்டலிஜெண்ட்தான். ஸ்ட்ராங்கா தான் பேசருர். யார் இல்லேங்கரு? நேருவும் ரெஸ்பெக்ட் வெச்சுதான் மீட் பண்ணியிருக்கார். பாலிஸி கிளியரா இல்லியே!''

''ஸார், இந்த ஸௌத் ஆப்பிரிக்கன் ப்ரீமியர்!''

''அட, சரித்தான், ஸௌத் ஆப்பிரிக்காவுமாச்சு, புட லங்காயுமாச்சு. அடேடே! மார்க்கெட்டுலே பிஞ்சு புடலங்கா சீப்பா வந்திருக்காம். விலே ஏர்றதுக்கு முன்னே அதை வாங் கிண்டு போய்ச் சேருவோம், வாரும்.''

# 'நர்ஸ்' நாகமணி

அவளுடைய கறுத்த மேனிக்கு அந்த வெள்ளை கவுன் 'பளிச்' சென்று இருக்கும். தலையைப் பின்னிக் கொண்டையாக வளைத்துக் கட்டி நர்ஸுக்குரிய பட்டையான வெள்ளைத் துணியை அதன் மீது செருகியிருப்பாள்.

இரு கைகளையும் அடிக்கடி கவுன் பாக்கெட்டுகளில் விட்டுக்கொண்டு 'வார்டு பாய்'களை விரட்டியபடியே 'டக்டக்' கென்று நடந்து செல்வாள். ஆங்கிலமும் கொச்சைத் தமிழும் கலந்த மணிப் பிரவாள நடையில் கீச்சுக் கீச்சென்று கத்தி வார்டையே அதிரச் செய்வாள்.

"ஏ, முனுசாமி! இத்தினி நேரம் எங்கே போயிருந்தே! நீ வரவரக் கெட்டுப் போச்சு. வராண்டா கிளீன் பண்லே; ஏழாம் நெம்பர் பெட் மாத்தலே. இரு இரு டாக்டர் கிட்டே சொல்லி உனக்கு 'பய்ன்' போட்டு வெக்கிறேன். அப்பத்தான் புத்திவரும் உனக்கு. போய் அந்த 'சிரிஞ்சு' எடுத்துக்கிட்டு வா...டயம் என்ன ஆச்சு தெரியுமா? டாக்டர் வந்தா யாரு டோஸ் வாங்கறது? உனக்கு மூளை இல்லே?..."

"நர்ஸியம்மா..." நோயாளி ஒருவருடைய குரல் இது.

"யாரது கூப்டறது? ஏன் தொந்தரவு பண்றே?" மறுபடியும் ஓர் அதட்டல்.

"நான்தாம்மா...நாலாம் நெம்பர் பெட்...

"யாரு? பிராக்சர் கேஸா? இன்ன ஒனும் ஒனக்கு?"

"தண்ணி வேணும்மா..."

"தண்ணி இல்லே...சும்மா சும்மா தண்ணிக் குடிக்காதே. 'ஸெப்டிக்' ஆயிடும்.

"அம்மா..."

"யாரது...ஸ்!"

"நான்தாம்மா எட்டாம் நெம்பர்..."

"யாரு? ஸ்டமக் ஆபரேஷ்ன? ஒனுக்கு இன்ன ஒனும்?..."

"வீட்லேருந்து பலாப்பழம் வந்திருக்குதும்மா, சாப்பிட லாமாம்மா...?"

"நல்ல ஆலு நீ! பலாப்பலம் தின்றே? ஜாக் ஃபுருட்! டாக்டர் வரட்டும் சொல்றேன். வயத்து வலிக்கு ஆப்ரேஷன் பண்ணிக்கிட்டு, பலாப்பலம் சாப்றயா? உன்னே டிஸ்சார்ஜ் பண்ணிடறேன் பாரு; பாய், எங்கே அந்த பலாப்பலம்? எடு இப்படி! இந்தா, இதைக் கொண்டுபோய் என் டேபில் மேலே வை. நீ துன்னுப்புடாதே! வார்டு பூரா குப்பை! வாட்டர் புடிச்சு வெக்கலே...பேஸின் கொண்டாந்து வெக்கலே. போய் க்விக்கா கொண்டா மேன். ட்வெண்டி த்ரீ பெட்டுக்கு 'பெட் பேன் வேணுமாம்; அடுச்சுக்குது பார். போ, போ..."

"இன்ன நல்லசாமி! சொகமாயிட்டாயா? இப்ப எப்படி இருக்குது மார்வலி?"

"பரவாயில்லம்மா."

"இந்தா, மருந்து குடிச்சுடு. ராத்திரி பில்ஸ் சாப்டயா? நல்லா தூங்னியா?"

"சாப்பிட்டேம்மா; தூங்கினேம்மா."

"நல்லாயிடும். அடுத்த மாசம் வேலைக்குப் போகலாம். இவங்கல்லாம் யாரு? மணி ஆறு ஆவப் போவுது. நீங்க

எல்லாரும் வெளியே போங்க. விஸிடர்ங்க டயம் ஆறு வரைக்குந்தான்: வந்தா க்விக்கா பேசிட்டுப் போயிடணும். கண்டதெல்லாம் பேஷண்டுங்களுக்கு வாங்கிக் கொடுத்துக் கெடுக்கக்கூடாது. அந்த அம்மா கையிலே என்னது, நல்லசாமி?"

"வேர்க்கடலை உருண்டேம்மா."

"கிரௌண்ட் நட் கேக்! இவங்களை உள்ளே விட்டதே தப்பு—டயட் பாஸ் இல்லாம இதெல்லாம் யாரு எடுத்துக் கிட்டு வரச்சொன்னது உங்களை—ஆவட்டும் சொல்றேன்—!"

நர்ஸ் நாகமணி, வார்டுக்குள் வருகிறாள் என்றாலே எல்லாருக்கும் பயந்தான். எல்லோரையும் விரட்டிக் கொண்டேயிருப்பாள் அவள்.

அவள் பேச்சுமட்டும் கடுமையாகத்தான் இருக்கும். ரூல் என்றால் ரூல்தான். ரூலுக்கு விரோதமாக எதுவும் நடக்கக் கக் கூடாது அவளுக்கு. அது நோயாளியாக இருந்தாலும் சரி; விசிடர்களாயிருந்தாலும் சரி, வார்டு பாயாக இருந்தா லும் சரி, எல்லோரிடமும் ஒரே கண்டிப்புத்தான்.

"நர்ஸம்மா அப்படித்தான் பேசும். ஆனால் நல்ல மாதிரி" என்பான் வார்டு பாய்.

டூட்டிக்கு வரும்போது இருக்கும் அதட்டலும் உருட்ட லும் டூடி முடிந்து வெளியே போகும்போது அடியோடு மாறி விடும். வேறு நர்ஸிடம் டூடியை ஒப்படைக்கும்போது அந்த நர்ஸை ஒவ்வொரு பெட்டாக அழைத்துக்கொண்டு போய் அந்தந்த கேஸுகளைப் பற்றிய விவரங்களைச் சொல்லிவிட்டுச் செல்வாள். அப்போது அவள் நோயாளிகளிடம் பேசுகிற மாதிரியே வேறு. எல்லோரிடமும் அன்பொழுகப் பேசுவாள். காலையில் நெருப்பு மாதிரி சீறிக்கொண்டிருந்தவளா இப்போது இப்படிப் பச்சை வாழைப்பட்டையாக மாறி விட்டாள் என்று அதிசயிக்கத் தோன்றும்.

"என்ன ஸெவண்டீன்! நான் வரட்டுமா? நல்லா தூங்க ணும்; மருந்து குடிக்கணும். இந்த நாகமணி வார்டுக்கு வர பேஷண்டுங்க நல்லபடியாத்தான் திரும்பிப் போவாங்க" என்று ஒவ்வொரு நோயாளியிடமும் பெருமையாகச் சொல்லி விட்டுப் போவாள். முதலில் விஸிடர்களிடம் கோபமாகப் பேசிவிட்டு அவர்கள் போகும்போது சந்தோஷமாக அனுப்பு வாள். அவர்களோடு வரும் குழந்தைகளுக்கு ஆரஞ்சு, பிஸ்கெட் முதலிய தின்பண்டங்களைக் கொடுத்து, 'பாப்பா சாப்டு' என்று கொஞ்சி அனுப்புவாள். யாராவது அவளுக்கு இனாம் கொடுக்க முன் வந்தால் ரொம்பக் கோபம் வந்துடும் அவளுக்கு. "இந்த நாகமணி யார் கிட்டேயும் காசு வாங்கமாட்டா. அந்த வார்டு பாய்கிட்டே கொடுங்க பாவம், புள்ளைக்குட்டிக்காரன்" என்பாள்.

டூடி முடிந்து வேறு உடை மாற்றியதும் நர்ஸ் நாகமணி யின் தோற்றமே அடியோடு மாறிவிடும்.

அவள் கறுப்புதான். ஆனால் நல்ல அழகி. நாகரிகமா கப் புடவையும் ஜாக்கெட்டும் அணிந்து முகத்தில் பவுடர் பூசிக்கொண்டு வெளியே கிளம்பிவிடுவாள்.

மூர்மார்க்கெட்டின் உள் வட்டத்தை ஒரு 'ரவுண்டு' சுற்றிவிட்டு இங்கிலீஷ் சினிமா ஏதாவது ஒன்று பார்த்து விட்டுத்தான் க்வார்ட்டர்ஸுக்குத் திரும்புவாள்.

ஞாயிற்றுக்கிழமைகளில் காலையில் சர்ச்! பகலில் தூக்கம்! மாலையில் சினிமா! மறுபடியும் டூடி! இதுதான் நாகமணியின் வாழ்க்கை.

# 'வைத்தியர்' வேதாசலம்

எமனே பயந்து நடுங்கக் கூடிய குரல். பேச்சில் நயமோ தயவோ தாட்சண்யமோ இருக்காது. யாரையும் தூக்கி எறிந்தாற் போலத்தான் பேசுவார். நோயாளிகள் தங்கள் வியாதியைப் பற்றி விவரிக்கும்போது வைத்தியர் வேதாசலம் இஷ்டமிருந்தால் 'ஊம்' போடுவார். காட்டு மிருகங்கள் உறுமுவதைப்போல் அவர் 'ஊம்' போடுவதைக் கேட்கும்போதே நோயாளிகளுக்குச் சப்த நாடிகளும் அடங்கிப் போகும், கடைசியில் அவர் புட்டியில் மருந்தையும், டப்பாவில் லேகியத்தையும் கொண்டுவந்து கொடுத்துவிட்டுக் கண்டிப்பான குரலில், "மூன்று நாளைக்கு இதைச் சாப்பிடணும். அடுத்த வெள்ளிக்கிழமை மறுபடியும் என்னை வந்து பார்க்கணும். இப்போது மருந்துக்கு இரண்டு ரூபாய் கொடுக்கணும்" என்பார்.

"அடுத்த வெள்ளிக்கிழமை கலியாணங்க. அதனாலே..."

"வியாதியெல்லாம் தீர்ந்த பிறகு கலியாணம் செய்துக்கலாம்......இப்ப ஒண்ணும் அவசரம் இல்லே..."

"கல்யாணம் எனக்கு இல்லிங்க. என் சகலபாடி மகனுக்கு."

"அது சகலபாடியோ, வியாசர்பாடியோ? வெள்ளிக்கிழமை இங்கே வந்தாகணும்."

"ஊம்; அடுத்த கேஸ் யாரய்யா? நீயா? உனக்கு என்ன?"

"மூணு நாளா பாதை பொறுக்கலீங்க. முதுகுப் பக்கம் ஒரே வலியாயிருக்குது. மல்லாந்து படுத்தா மாறை வலிக்குது."

"அப்படியா? இனி மல்லாந்து படுக்காதே, போ! இந்தா, இந்த மாத்திரையை ஒரு வாரம் சாப்பிடு. சரியாயிடும்! ஊம்...பெரியவரே, உமக்கு என்ன?..."

"உடம்புக்குச் சொகம் இல்லீங்க!"

"அது தெரியுது. இல்லேன்னு எதுக்கு என்னைத் தேடிக் கிட்டு வரப்போறீங்க? வைத்தியரைத் தேடிக்கிட்டு வந்தாலே உடம்புக்குச் சொகம் இல்லேன்னுதான் அர்த்தம். வியாதி என்னங்கறதைச் சொல்லும்!"

"பசி இல்லே."

"இருக்காது."

"காது கேட்கல்லே."

"கேட்காது!"

"கண் தெரியல்லே."

"தெரியாது."

"இதுக்கு என்ன செய்யலாங்க?"

"உமக்கு என்ன வயசு ஆகுது?"

"எழுபத்தொன்பது."

"பேசாமல் வீட்டிலேயே இரும். வயசாயிட்டப்புறம் இதுக்கெல்லாம் மருந்து கிடையாது. அப்புறம்? இந்தக் குடையை இங்கே யார் வைத்தது? நீயா? இந்த ஈரக் குடை யைக் கொண்டுவந்து நாலுபேர் உட்காருகிற பெஞ்ச் மேலே வெச்சிருக்கயே? உனக்கு புத்தி இருக்கா?" வைத்தியர் அந்த ஈரக் குடையை எடுத்துக் கோபமாக வெளியே வீசி எறிவார்.

"வைத்தியரய்யா, என்னைக் கொஞ்சம் சீக்கிரம் கவனி யுங்க. தெருவிலே டாக்ஸி வெயிட் பண்ணுது."

"ஏன்யா, உனக்கு எந்த ஊரு?"

"திருநெல்வேலிங்க."

"மெட்ராஸுக்கு எதுக்கு வந்தே?"

"வைத்தியம் செஞ்சுக்கத்தான்."

"உன்னோடு எத்தனை பேரு வந்திருக்காங்க?"

"இரண்டு பேரு!"

"எங்கே தங்கியிருக்கிங்க?"

"ஓட்டல்லே."

"ஏன்யா, ரயிலுக்கும் ஓட்டலுக்கும் பணத்தைச் செல வழிச்சுக்கிட்டு வந்தவருக்கு டாக்ஸிக்கு வெயிட்டிங்கிலே ஒரு நாலணுக் கூட ஆயிட்டா குடியா முழுகிடும்? உனக்கு முன்னலே வந்தவங்களையெல்லாம் கவனிச்சப்புறந்தான் உன்னைக் கவனிப்பேன். அவசரமாக இருந்தா எழுந்து போகலாம்."

"ஐயா, ஐயா, ஒரு மாசமா வயிற்றுவலி தாங்காமல் துடிக் கின்றேன்யா."

"இந்தச் சூரணத்தைத் தேனிலே குழைச்சு மூணு நாளைக் குச் சாப்பிடு. சரியாப் போயிடும்."

"ஆகாரம் என்னங்க சாப்பிடலாம்?"

"மசாலா தோசையும், மலபார் அடையும் சாப்பிடு. ஆளைப்பாரு ஆளை! வயிற்று வலின்னுட்டு ஆகாரம் என்ன சாப்பிடலாமாம்? ஒரு மாசத்துக்குச் சாப்பாட்டையே தொடக்கூடாது. தெரியுமா? ரவையும், சர்க்கரையும் சேர்த்துக் கஞ்சி பண்ணிச் சாப்பிடணும். ரவையும் சர்க்கரை யும் சேர்த்து லட்டா செஞ்சு சாப்பிட்டா என்னுன்னு கேட்கக் கூடாது. ஊம்...உமக்கு என்ன?"

"அடிக்கடி மயக்கமா வருது."

"உத்தியோகம் எங்கே?"

"ரயில்வேயிலே இருக்கேன்."

"ரெயில்வேலே இருக்கேன்னு போறுது. போர்ட்டர்கூட ரெயில்வேலேதான் இருக்கான். என்ன வேலைங்கறதைச் சொல்லணும்."

"ஹெட் கிளார்க்!"

"அப்படிச் சொல்லுமே; சம்பளம்?"

"நூற்றெண்பது ரூபாய்."

"பிடிப்பு உண்டா?"

"இடுப்பண்டை அடிக்கடி பிடிச்சுக்குது."

"ஓய், அதைக் கேட்கலே. சம்பளத்திலே பிடிப்பு உண்டான்னு கேட்டேன்."

"உண்டு, உண்டு; பிடிப்பெல்லாம் போக கைக்கு நூற்றைம்பதுதான் வருது!"

"ஊம்; இதிலே மூணு வேளை மருந்து இருக்குது; நாலு மணிக்கொரு தடவை சாப்பிடணும். அப்புறம் ஒரு மண்டலம் நவரக்கிழி சிகிச்சை செய்துக்கணும். நூறுரூபாய் செலவாகும் அதுக்குத்தான் உம் வேலையைப்பற்றி விசாரிச்சேன்."

"சரிங்க, இந்த மூணு அவுன்ஸை எத்தனை நாளைக்குச் சாப்பிடறது?"

"நாலு மணிக்கு ஓர் அவுன்ஸ்வீதம் மூணு வேளை சாப்பிட்டால், இந்தப் புட்டியிலே இருக்கிற மருந்து ஒரு நாளைக்குத்தான் காணும். இந்தச் சின்னக் கணக்குக்கூடத் தெரியறதில்லே. நான் சொல்றப்பவும் கவனிக்கிறதில்லே. ஊம்... அடுத்த கேஸ் யாரு?..."

"சவனப்பிராஸம் அரைபாட்டில் வேணுங்க!"

"இப்படி எழுந்து வந்து, என்னுடைய நாற்காலியிலே உட்கார்ந்துகொள்ளும். என்னய்யா முழிக்கிறீர்? ஏன்யா வைத்தியர் நானா? நீரா? உம் வியாதி என்னங்கறதைச் சொல்லும். மருந்து என்ன என்பதை நான் சொல்கிறேன் சவனப் பிராஸம் வேணுமாம், சவனப்பிராஸம்!"

வைத்தியர் வேதாசலம் நோயாளிகளிடம் என்னதான் சீறிப் பாய்ந்தாலும் எவ்வளவுதான் எரிந்து விழுந்தாலும் எல்லோரும் அவரைத்தான் தேடி வருவார்கள். என்ன செய்ய லாம்? வைத்தியருக்கு வாய் பொல்லாததுதான். ஆனால் கை ராசிக்காரராயிருக்கிறாரே!

# அமெச்சூர் ஆராவமுதன்

''என்னப்பா, சிட்டிபாபு! எங்கப்பா, கிளம்பிட்டே? உன்னைப் பார்க்கத்தாம்பா வரேன். போன காரியம் ஸக்ஸெஸ் அதாவது வெற்றி!

நாடக ஆசிரியர் நாகபூஷணம் இல்லே, அதாம்பா 'காதலா அல்லது சாதலா?'ன்னு ஒரு நாடகம் எழுதினுரே, அவரைப் புடிச்சு ஒரு கதை கேட்டிருக்கேன். கையிலே ஒரு சரித்திர நாடகம் ரெடியாயிருக்காம். க்ளைமாக்ஸ் ஸீன்தான் எழுதணுமாம், அதையும் அடுத்த சனிக்கிழமைக்குள்ளே முடிச்சுத் தந்துடறேன்னுட்டாரு. நல்ல லக்கி சான்ஸப்பா நமக்கு!

கதையைக்கூடச் சொல்லிட்டாரு. மொத்தம் முப்பத்தாறு ஸீன்தானும். லவ்வு, திரில்லு, சண்டை, சஸ்பென்ஸ் எல்லாம் வெச்சிருக்காரு! கதையை டிராஜிடியாவும் முடிக்கலாம், இல்லேன்னு காமெடியாவும் மாத்திக்கலாம்.

நாடகத்துக்கு டைடிலே அட்ராக்டிவா இருக்குது. அதாவது பேரே ரொம்ப கவர்ச்சி! என்ன பேர் தெரியுமா? 'திப்பு செய்த தப்பு!'

என்னப்பா சிரிக்கிறே? தலைப்பே தமாஷாயிருக்கேன்னு தானே? அதுமட்டுமில்லே. திப்பு என்ன தப்பு செய்தாங்கறது தான் கதைக்கே சஸ்பென்ஸ்!

'திப்பு செய்த தப்பு'ன்னு பேரு ஒனபதே எழுத்திலே அமைஞ்சு போச்சு! இல்லாதபோனு 'ச்'சன்னு ஒண்ணு சேர்த்து, 'திப்புச் செய்த தப்பு'ன்னு பெயரை மாத்தவேண்டி, யிருந்திருக்கும்.

மூலக் கதை ஆசிரியர் நாகபூஷணம்னு போட்டுவிட்டு, டயலாக்கெல்லாம் நம்ம கோபால்சாமியை விட்டு எழுதிக்க லாம்பா. நம்ம சிநேகிதர்களுக்கெல்லாம் சொல்லிடு. அடுத்த ஞாயிற்றுக்கிழமையே நாடக மன்றத்தை ஆரம்பிச்சுடலாம்.

நம்ம அமெச்சூர் நாடக மன்றத்துக்குப் பேர்கூடத் தீர் மானச்சுட்டேம்பா. சதர்ன் ரெயில்வேஸ் கூட்ஸ் ஷெட் ஆபீஸர்ஸ் அமெச்சூர் டிரமாடிக் அஸோஸியேஷன்! தன்னடா பேரு கூட்ஸ் வண்டி மாதிரி நீளமா இருக்குதேன்னு பாக்கறயா? அது பரவாயில்லே; எஸ். ஆர். ஜி. ஓ. ஏ. டி. ஏ. அளிக்கும் முதல் சரித்திர நாடகம்—திப்பு செய்த தப்புன்னு தான்—போஸ்டர்!

பாரு, இன்னும் இரண்டே மாசத்திலே இந்த நாடகத்தை அரங்கேத்தாட்டா என் பேரு ஆராவமுது இல்லே. ஆமாம்; எல்லா சபா செக்ரிடரிங்களேயும் முதல் நாடகத்துக்கே 'இன்வைட்' பண்ணப் போறேன். ரிஹர்ஸலுக்குக் கூட ஓர் இடம் யோசிச்சு வெச்சிருக்கேம்பா. ஏ. பி. எலிமெண்டரி ஸ்கூல் இல்லே? அது கோடை லீவுக்கு ரெண்டு மாசம் பூட்டித் தான் இருக்கப் போவுது. அந்த ஸ்கூல் ஹெட்மாஸ்டரை எனக்கு நல்லாத் தெரியும். அவரைப் புடிச்சா அந்த இடம் கிடைச்சுடும். ஹெட்மாஸ்டருக்கு ஒரு 'பேமிலி பாஸ்' குடுத்துட்டாப் போச்சு.

இன்னைக்கு ஒன் அண்டு டூவிலே சந்திக்கலாம். ராமா நுஜம், சுந்தரம், பார்த்தசாரதி, கோபால்சாமி, கமால் பாஷா, எஸ். கே. அய்யங்கார் எல்லாரையும் மீட் பண்ணி விஷயத்தைச் சொல்லிடுவோம். எஸ். கே.யைத்தாம்பா ஹீரோயினாப் போடலாம்னு உத்தேசம். கமால் பாஷாவைத் திப்புவாப் போட்டுடலாம்."

"அடா! நீ இன்னுப்பா, கமால் பாஷாவைத் திப்புவாப் போடறேங்கறே? அவன் ஒரேயடியாத் திக்குவானேப்பா!"

"தாடி நேச்சுரலாயிருக்குமேன்னு பார்த்தேன். சரி, உட்டுடு; வாணும். நம்ம ஹெட்கிளார்க் லோகநாதனைப் போட்டுடலாமா? அவனுக்கு ஸ்டேஜ் எக்ஸ்பீரியன்ஸ் இருக்குது; என்ன சொல்றே?"

"அது ஐடியா! சரி, தபலா, ஆர்மோனியம் இதுக்கெல்லாம்...?"

"அதுக்கெல்லாம் ஆளுங்க இருக்காங்கப்பா. ஆராவமுது மனசு வெச்சா ஆகாத காரியம் உண்டா? டைரக்ஷனுக்குக்கூட ஆசாமி யாருன்னு தீர்மானிச்சு வெச்சிருக்கேன். யார் சொல்லட்டுமா? 'யானை பிடிச்சவன் தைரியசாலி'ன்னு ஒரு படம் வரல்லே, அதன் டைரக்டர்!"

"ஜமாய் ஆராவமுது, நான் வறேன். இண்டர்வல்லே மீட் பண்ணுவோம்..."

நண்பர்களைக் கூட்டி, இரண்டு மாதம் இராப் பகல் தூக்கமில்லாமல் கஷ்டப்பட்டு, கைப் பணத்தைச் செலவழித்து, ஒரு விதமாக ஒத்திகை நடத்தி நாடகத்துக்குத் தேதியும் வைத்து விட்டான் ஆராவமுதன். அலைந்து திரிந்து தெரிந்தவர்கள் தலையிலெல்லாம் டிக்கட்டைக் கட்டினான். பத்திரிகைக் காரர்களையெல்லாம் நேரில் போய்ப் பார்த்து, "கட்டாயம் நாடகத்துக்கு வந்து உங்க பேப்பர்லே விமர்சனம் எழுதனும், ஸார்" என்று கேட்டுக்கொண்டான். நாடகத்துக்கு ஒருசினிமா நட்சத்திரத்தைத் தலைமை தாங்க ஏற்பாடு செய்தான். எஸ்.ஆர்.ஜி.ஓ. ஏ. டி. ஏ. நாடக அரங்கேற்ற மலர் ஒன்று தயாரித்து அதில் நடிகர்களின் போட்டோக்கள், கதைச் சுருக்கம் இவற்றை வெளியிட்டான். அட்டையின் கடைசிப் பக்கத்தில்,

எமது அடுத்த சமூக நாடகம்

?

எதிர்பாருங்கள்.

என்று விளம்பரமும் செய்தான்!

கடைசியில் நாடகம் ஒருவிதமாக நடந்து முடிந்தது. அவ்வளவுதான்.

நாடகம் முடிந்ததும் நண்பர்கள் எல்லோரும் நழுவி விட்டார்கள். கடைசியாகத் தியேட்டரில் மிஞ்சியது ஆராவமுதுதான். அவனுக்கு இதில் ஏக நஷ்டம். ஏகக் கஷ்டம்.

ஓட்டல்காரர், அச்சாபீஸ்காரர் எல்லோருக்கும் ஈடு கொடுத்துவிட்டு இராத்திரி ஒரு மணிக்குமேல் வீடு போய்ச் சேர்ந்தான்.

ஆனால், ஆராவமுது இதைப்பற்றியெல்லாம் கவலைப்பட வில்லை. நாடகம் வெற்றி ஆகவில்லையே என்கிற ஒரே குறை தான். மறுநாள் கூட்ஸ் ஷெட்டில் நண்பர்களிடமெல்லாம் இதே பேச்சுத்தான்.

"போப்பா! ஏ.எஸ். டயலாக் சரியாவே பேசல்லேப்பா! 'திப்பு நீ செய்தது தப்பு'ன்னு சொல்றதுக்குப் பதிலா 'தப்பு நீ செய்தது ரொம்பத் திப்புன்'னுட்டாம்பா. இதுக்கு பொங்கல், மிளகுவடை, டீ ஒரு கேடு. ஸ்திரீ பார்ட்டும் சரி இல்லே. அய்யங்காருக்கு இடுப்பு ரொம்பப் பெரிசுப்பா! இடும்பியா ஆக்ட் பண்றவனைக் கொண்டுவந்து ஹீரோயினா போட்டா எப்படியிருக்கும்? ப்ராம்ப்டர் வேறே உரக்க உரக்கப் பேசிட்டாரு. அவர் பேசறது ஆடியன்ஸ் காதுலேயே விழுது. நாடகம் முடிஞ்சதும் ஜனங்க என்னா பேசிக்கிட்டுப் போனாங்க தெரியுமா? நாடகத்திலே டெம்போவே இல்லையாம். 'கூட்ஸ் ஷெட் ஆசாமிங்கதானே? டெம்போவும் அப்படித்தானே இருக்கும்'னு சொல்லிக்கிட்டு போனாங்க."

# 'எதிர்வாதம்' ஏகாம்பரம்

"ஏகாம்பரம் பேப்பரில் பார்த்தயா! சினிமா ஸ்டார் கங்காதேவி கல்யாணத்திலே பத்தாயிரம் பேருக்குச் சாப்பா டாம். காலையிலே ஆரம்பித்த பந்தி ராத்திரி பன்னிரண்டுமணி வரைக்கும் நடந்ததாம். தெரியுமா உனக்கு?"

"சரிதாண்டா, இதைப் போய் ஒரு பெரிய அதிசயமாகச் சொல்ல வந்துட்டே! சினிமா ஸ்டார்தானேடா? செலவழிக் கட்டுமே: நானும்கூட சினிமா ஸ்டாராக இருந்தா பத்தாயிரம் பேர் என்ன, பத்து லட்சம் பேருக்குச் சாப்பாடு போடுவேன். அந்தக் கல்யாணத்திலே எத்தனை பேர் சாப்பாடு இல்லாம திரும்பிப் போனுளாம், தெரியுமா?" என்று வந்தவரை மடக்கி விடுவார் ஏகாம்பரம்.

திண்ணையில் உட்கார்ந்து வெற்றிலையைப் போட்டபடியே தெருவில் போவோர் வருவோரை எல்லாம் அழைத்து அவர் களுடன் வம்பளப்பதுதான் அவருடைய தினசரி வேலை.

"தெரியுமா சேதி? சினிமா ஸ்டார் வீட்டுக் கல்யாணத்தில் ஒரே கலாட்டாவாம், ரொம்ப பேர் சாப்பிடாமலே திரும்பிப் போய்விட்டாளாம்" என்று சொல்லிக்கொண்டு வருவார் இன்னொருவர்.

"ஆமாம், ஏதோ முடிந்தவரைக்குந்தானே போடுவாங்க. சினிமா ஸ்டார்னு அதுக்காக எவ்வளவு பேருக்குத்தான் சாப்பாடு போட முடியும்? போய்யா, வேறே வேலையில்லே?" என்று அவரையும் மடக்கி அனுப்பிப்பார் ஏகாம்பரம்.

சிறிது நேரத்துக்கெல்லாம் மற்றொருவர் வந்து, "கேட்டயா அக்கிரமத்தை! திருவல்லிக்கேணி ரங்காச்சாரி இருக்கானே, அவன் லஞ்சம் வாங்கறாம்பா! பெரிய யோக்கியன் மாதிரி வேஷம் போட்டானே!" என்பார்.

"லஞ்சம் வாங்காமெ என்னடா செய்வான்? நீ அவன் நிலைமையில் இருந்தால் லஞ்சம் மட்டுமா வாங்குவே? கூடக் கொஞ்சமும் வாங்குவே. போடா, ஏதோ ஏழை பிழைச்சுட்டுப் போவான்னு விடுவியா? இதை ஒரு பெரிய சேதியா 'டாம் டாம்' போட வந்துட்டியே! வேணும்னு ஒரு தடவைக்கு வெத்திலே சீவலே எடுத்துண்டு போ" என்பார்.

அவர் போனதும் வேலுசாமி என்பவர் ரங்காச்சாரிக்காகப் பரிந்துகொண்டு வருவார். "பாவம் ஸார், அந்த ரங்காச்சாரி! 'பேமிலிமேன்' அவன் ஏதோ 'சம்திங்' வாங்கிட்டான்னு இந்த ஆசாமி ஊர் முழுவதும் சொல்லிக்கொண்டு திரியறான்! இவனுக்கு என்ன ஸார் வந்தது? இவன் மட்டும் வாங்க மாட்டானா? பெரிய அரிச்சந்திரன் மாதிரி பேசறானே?" என்பார் அவர்.

ஆனால், அவரையும் மடக்காமல் விடமாட்டார் ஏகாம்பரம். என்ன இருந்தாலும் ரங்காச்சாரி செய்தது தப்புதான் என்றும், மனுஷனுக்கு நாணயந்தான் முக்கியம் என்றும் தர்க்கம் செய்து அனுப்பி விடுவார்.

வேலுசாமி போனதும் வேறு ஒரு வேலைகெட்ட சாமி வருவார்.

"ஏகாம்பரம்! புதுப் படத்திலே ஔரங்கசீப் முருகேசன் நடிப்பைப் பார்த்தீங்களா? அமர்க்களப்படுத்தி இருக்கான்யா? டயலாக்கை அப்படியே நீர்வீழ்ச்சி மாதிரி கொட்டறான்!"

"போய்யா, பெரிய நடிப்பைக் கண்டுட்டீர்! ஒரு காலத்தில் நான் அமெச்சூர் நாடகத்தில் நடித்ததைவிடவா? என்

நடிப்பை நீர் பார்த்ததில்லே! இதென்னய்யா டயலாக் வேண்டியிருக்கு? நடிப்பு இல்லாதவனுக்குத்தானே டயலாக்? நான் வாயைத் திறக்காமலே நடிச்சு, பாக்கறவங்க கண்ணிலே தண்ணி வரவழைப்பேன்'' என்பார் ஏகாம்பரம்.

இவர் போன பிறகு ஔரங்கசீப் முருகேசன் நடிப்பு நன்றாக இல்லை என்றும், நடிக்கத் தெரியாமல் டயலாக்கை மட்டும் ஒப்பித்தால் போதுமா என்றும் சொல்லிக்கொண்டு வருவார் வேறொருவர்.

ஏகாம்பரம் அவரைமட்டும் சும்மா விட்டுவிடுவாரா என்ன?

''ஆமாம், இவரு கிழிச்சுப்பிடுவாரு. இந்த அமெச்சூர் நடிகன்களெல்லாம் இந்த ஔரங்கசீப் நடிப்பைப் போய் பார்க்கணும். இன்னைத் தேதிலே அவனை விட்டா நடிக்கறத்துக்கு வேறே ஆள் ஏதய்யா? முகபாவத்திலே யாரு வேணுலும் நடிச்சுடலாம். டயலாக் பேசத் தெரிய வேண்டாமா?'' என்று ஒரு போடு போடுவார் ஏகாம்பரம்.

''பார்த்தீரா ஏகாம்பரம், 'ஸம்மிட்' மகாநாட்டு லட்சணத்தை? அமெரிக்காகாரன் ரஷ்யாமீது பறந்து வந்து வேவு பார்த்திருக்கான். பத்து மைல் உயரத்திலே பறந்த அந்த விமானத்தை ரஷ்யாக்காரன் சுட்டுத் தள்ளியிருக்கான்... பின்னே, சுடாமல் விடுவானோ? குருஷ்சேவ் செய்ததுதான் 'ரைட்'! பொல்லாத ஆளாச்சே அவன்'' என்று வருவார் பரமசிவம்.

''என்னய்யா சொல்றீர்? குருஷ்சேவ் செய்தது ரைட் என்கிறீரா? எப்படிய்யா நியாயம்? இவனுக்கும் சாமர்த்தியம் இருந்தா அமெரிக்காவிலே போய் வேவு பார்க்கட்டுமே?'' என்று சொல்லி, குருஷ்சேவுக்குப் பரிந்துகொண்டு வந்த பரமசிவத்தைக் கோபமாகப் பார்ப்பார் ஏகாம்பரம்.

சற்றைக்கெல்லாம் சாம்பசிவம் வருவார்.

"என்ன இருந்தாலும் குருஷ்சேவ் செய்தது தப்புதான் சார். வேவு பார்க்கவந்த விமானத்தைச் சுடலாமா? நீங்க சொல்லுங்க, ஏகாம்பரம்" என்பார் அவர்.

இந்தச் சமயத்தில் இன்னொருவர் வந்து சேருவார். அவர், "ஏன் சுடக் கூடாது? அமெரிக்காக்காரன் மட்டும் அங்கே திருட்டுத்தனமாப் போகலாமா? அதான் சுட்டான்" என்பார்.

இம்மாதிரி சமயங்களில் ஏகாம்பரத்திற்கு யாரை மடக்குவது என்று தெரியாமல் போய்விடும். ஒருவர் குருஷ்சேவ் செய்தது தப்பு என்கிறார். இன்னொருவர் ஐக்தான் தப்பு என்கிறார். ஏகாம்பரமோ இரண்டு பேரையும்ம மடக்க ஆரம்பித்து விடுவார்.

"என்னய்யா சொல்றீங்க ரெண்டு பேரும்? அமெரிக்கா ப்ளேனை விட்டதும் சரிதான். ரஷ்யா அதைச் சுட்டதும் சரி தான். இதெல்லாம் அரசியல் விளையாட்டய்யா. நீங்க யார் இதை எதிர்த்துப் பேசுவதற்கு?" என்று இருவரையும் எதிர்த்து மடக்கிப் போட்டுவிடுவார்.

இப்படி யார் வந்து எதைச் சொன்னபோதிலும் ஏகாம்பரம் அவர்களை எல்லாம் மடக்கிப் போட்டுப் பேசுவதே வழக்கமாகிவிட்டது. இதனால் எதிர்வாதம் செய்யும் ஏகாம்பரத்தின் குணத்தை அறிந்தவர்கள் அவரிடம் வரும்போதே தங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லாமல் நேர்மாறாகச் சொல்லிக்கொண்டு வருவார்கள். ஏகாம்பரமோ அதை அறியாமல் அவர்கள் கூறும் அபிப்பிராயத்தை எதிர்த்துப் பேசுவதாக எண்ணிக்கொண்டு தம்மையறியாமல் வருபவர்களின் அபிப்பிராயத்தையே ஒப்புக்கொண்டு விடுவார்!

# 'அநுமார்' சாமியார்

ஆலம் விழுதுபோல் சடை சடையாகத் தொங்கும் பரட்டைத் தலைமயிர். கையிலே ஒரு பை; இடுப்பிலே காவி வேட்டி. தாடியும் புருவமும் போக நெற்றியிலே உள்ள இடைவெளி முழுதையும் பட்டை நாமம் மூடி மறைத்துக் கொண்டிருக்கும். இப்படிப்பட்ட ஓர் ஆசாமியை எங்கோ பார்த்திருக்கிறீர்கள் அல்லவா? அவர்தான் அநுமார் சாமியார்!

அவருக்கு என்ன வயசோ, எந்த ஊரோ, என்ன பேரோ, எங்கே பிறந்து எங்கு வளர்ந்தவரோ?—யாருக்குமே எந்த விவரமுமே தெரியாது.

அவர் தெருவில் நடந்து சென்றால், "டேய், அநுமார் சாமியாருடா!" என்று பத்துப் பிள்ளைகளாவது அவர் பின்னோடு நடந்து செல்வார்கள்.

அநுமார் சாமியார் பாட்டு பாடிக்கொண்டே நடப்பார். ஆனால், பிச்சை எடுக்கமாட்டார். பார்ப்பதற்குப் பைத்தியக் காரரைப்போல் காணப்படுவார். ஆனால், அவர் பைத்தியக் காரர் அல்ல.

ஊர் ஊராகப் போய், சுவர் சுவராக அநுமார் படம் எழுதுவதுதான் அவருடைய வேலை, லட்சியம் எல்லாம். அவருடைய பையில் என்னென்னவோ இருக்கும். காவிக் கற்கள், உற்சவ நோட்டீசுகள், ஒரு பித்தளைச் செம்பு, கிழிசல்

கம்பளி, வேர்க்கடலை, நாமக்கட்டி—இவைதான் அவருடைய ஆஸ்தி. பகலெல்லாம் சுற்றிவிட்டு இரவில் ஏதாவது ஒரு மரத்தின் கீழோ, சத்திரத்துத் திண்ணையிலோ போய்ப் படுத்துக்கொள்வார். அதுவும் இஷ்டமிருந்தால்தான். இல்லையென்றால் அதுவும் இல்லைதான். இந்த உலகத்தோடு ஒட்டியும் ஒட்டாமலும் 'தாமரை இலைத் தண்ணீர்போல்' வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு துறவி அவர்.

பொழுது விடியும் முன்பே ஆற்றிலோ, குளத்திலோ இறங்கித் தலை முழுகிவிட்டு அந்த நாலுமுழக் காவித் துண்டையும் துவைத்து உலர்த்திக் கட்டிக்கொண்டு பரந்த நெற்றி முழுதும் பட்டை நாமத்தைக் குழைத்துப் போட்டுக் கொள் வார்.

பிறகு, ஊருக்குள் சென்று ஏதாவது ஒரு கிளப்புக்குள் நுழைந்து, "ஆண்டவனே, இந்தக் கட்டைக்கு என்ன கொடுக் கிறீங்க?" என்று கேட்பார். இரண்டு இட்டிலியும் ஒரு கப் டீயும்தான் அவருடைய காலை ஆகாரம் என்பது கிளப்புக் காரர்களுக்குத் தெரியும்.

ஆகாரம் முடிந்ததும் அதற்குண்டான காசைக் கொடுத்து விட்டு, கடைத்தெருப் பக்கம் கிளம்பிவிடுவார் சாமியார். போகும்போதே காலிச் சுவர் கண்ணில் தென்படுகிறதா என்று பார்த்துக்கொண்டுதான் போவார்.

பள்ளிக்கூடச் சுவர், கோயில் மதில் சுவர், முனிசிபாலிடிச் சுவர் இப்படி எத்தனை சுவர்கள் இல்லை? ஏதாவது ஒன்று அவருக்கு அகப்பட்டுவிடும். அவ்வளவுதான், பையிலுள்ள காவிக் கட்டிகளை எடுத்துத் தண்ணீரில் குழைத்துக் குச்சி மட்டையைக் கொண்டு சுவரில் அநுமார் சித்திரம் எழுத ஆரம்பித்துவிடுவார். அநுமார் சித்திரம் என்றால் அதில் எத்தனை எத்தனையோ வகை!

சஞ்சீவி பர்வதத்துடன் பறக்கும் அநுமார்!

விசுவ ரூப தரிசன அநுமார்.

சீதைக்குச் சூடாமணி அளிக்கும் அநுமார்.

இராவணனுக்கு எதிரில் வாலைக் கோட்டையாகக் கட்டி, அதன்மீது உட்கார்ந்திருக்கும் அநுமார்.

இராம பட்டாபிஷேகத்தில் பயபக்தியுடன் மண்டியிட்டு உட்கார்ந்திருக்கும் அநுமார்.

சில சுவர்களில் காவிக் கட்டிகளால் சித்திரிப்பார். சில சுவர்களில் சிவப்பு வர்ணத்தைக் கொண்டே எழுதுவார்.

பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளும், தெருவில் திரியும் சோம்பேறிச் சிறுவர்களும் அவர் எழுதும் அநுமார் சித்திரத்தைக் கண்கொட்டாமல் பார்த்து ரசித்துக் கொண்டிருப்பார்கள்.

இப்படி, பகல் முழுதும் எழுதுவார். சில சமயங்களில் இரவில்கூட எழுதிக்கொண்டிருப்பார்.

இன்றைக்குத் திருப்பதி, நாளைக்கு நாமக்கல், அதற்கு மறுநாள் பழநி என்று மந்திரிகளைப்போல் வருஷம் முழுவதும் சுற்றுப்பயணந்தான் அநுமார் சாமிக்கு.

நடக்க முடியாவிட்டால்தான் பஸ்ஸில் ஏறுவார். பணம் கொடுத்து டிக்கெட்டு வாங்கிக்கொண்ட பிறகே பஸ்ஸுக்குள் ஏறுவார்.

"சாமியாரே, உங்களுக்கு எதுக்கு டிக்கட்?" என்று கண்டக்டர் சொன்னபோதிலும் கேட்கமாட்டார்.

"அப்பனே! இந்தக் கட்டை யாருக்குப் பணம் சேர்த்து வைக்க வேணும்?"

"சாமியார் எதுவரைக்கும் போகணும்?" என்றுதான் பக்தியோடு கேட்பார்கள். அவருக்கு எந்த இடத்திலும் உபசாரந்தான். கோடைக்காலம் வந்தால்தான் அவர் ஓரிடத்தில் தங்குவார்.

நாலு சாலைகள் கூடும் சந்திப்பிலோ, சந்தைகள் கூடுமிடத்திலோ, உற்சவம் நடைபெறும் இடங்களிலோ, அநுமார்

சாமியார் 'தண்ணீர்ப் பந்தல்' போட்டுவிடுவார். பந்தலுக்கு முன்னால் 'அநுமார் தர்ம கைங்கரியம்' என்று எழுதியிருக்கும்.

ஒரு சிறு தென்னங்கீற்றுப் பந்தல், அதற்குள்ளே நீர் மோர், பானகம் இரண்டையும் பானைகளில் நிரப்பி வைத்துக் கொண்டு, ஏழை எளியோருக்கு வழங்குவார்.

தர்ம கைங்கரியத்துக்கு வேண்டிய பொருளுக்கும் பணத் துக்கும் அவர் யாரையும் தேடிச் செல்லமாட்டார். அவ்வள வும் அவரைத் தேடியே வரும்.

பைக்குள் செப்பு அநுமார் கவசங்கள் நிறைய வைத் திருப்பார். சிறு குழந்தைகளைக் கண்டால் அந்தக் கவசத்தில் ஒன்றை எடுத்து அரைஞாணில் கட்டிவிடுவார்.

அந்த நேரங்களில் குழந்தைகள் அவரைப் பூச்சாண்டி என நினைத்து அலறும்.

"அப்பனே, ஆண்டவா, அழாதே" என்று அன்போடு கூறுவார் சாமியார்.

கோயில்களில் கிடைக்கும் பிரசாதந்தான் அவருக்கு ஆகாரம்.

ஊருக்கு ஓர் அநுமார் கோயில் கட்டிவிடவேண்டுமென்பது அவர் ஆசை.

சாமியார், அநுமார் சித்திரம் போட்டுக்கொண்டிருக்கும் போது சாலை வழியே போகும் படித்த அறிவாளிகளில் சிலர், "இது ஒரு மாதிரிப் பைத்தியம். எந்தச் சுவரைக் கண்டாலும் அநுமார் படம் எழுதிக்கொண்டிருக்கும்" என்பார்கள். அவர் களிலேயே வேறு சிலர், "கண்ட கண்ட ஆபாச வார்த்தைகளை எழுதிச் சுவர்களைப் பாழாக்கும் பைத்தியங்களைக் காட்டிலும் இந்தப் பைத்தியம் எவ்வளவோமேல்" என்று அதற்குப் பதில் கூறுவார்கள்.

# 'நான்தான்' நாகசாமி

கையிலே ரிஸ்ட் வாட்ச், விரலிலே வைர மோதிரம், குரலிலே ஒரு கம்பீரம் இந்த லட்சணங்களைக் கொண்டவர் தான் நாகசாமி. அவருக்குத் தெரியாத பெரிய மனிதர்கள் கிடையாது. அவரால் சாதிக்க முடியாத காரியங்களும் கிடையாது. யாருக்கும், எந்த நேரத்திலும், எம்மாதிரி உதவி தேவையானாலும் நாகசாமியைத்தான் தேடுவார்கள். அவரும் செய்வார். ஆனால், "நான்தான் செய்தேன்" என்று கொஞ்சம் தற்புகழ்ச்சி செய்துகொள்வார்; அவ்வளவுதான்.

நகரத்தில் நடைபெறும் முக்கிய நிகழ்ச்சிகள் எல்லாவற்றிலும் நாகசாமியைச் சந்திக்கலாம்.

கலியாண ஊர்வலங்களில் அவர் 'அமுத்த'லாக நடந்து செல்லும்போது நாதசுரக்காரர் அவரைக் கண்டுவிட்டால், தம்முடைய வாசிப்பை அப்படியே நிறுத்திவிட்டு, அவருக்குக் கை கூப்பி வணக்கம் செய்வார். அச் சமயம் பார்க்கவேண்டுமே, நாகசாமியின் முகத்தில் பொங்கும் பெருமையை!

நாதசுர வித்வான் தமக்குக் கும்பிடுபோடுவதை நாலு பேர் கவனிக்கிறார்களா என்று ஒரு கண்ணால் அக்கம் பக்கத்திலுள்ளவர்களைக் கவனித்துக் கொள்வார்.

"என்ன ஸார், உங்களுக்குத் தெரியுமா இந்த நாதஸ்வரக்காரரை?" என்று யாராவது கேட்க வேண்டியதுதான்; உடனே தொடங்கிவிடுவார் :

"தெரியுமாவது? நான்தானே இவனை இந்த நிலைமைக்குக் கொண்டுவந்தேன்! செம்பனார் கோயில் பையனுச்சே இவன்? இவன் சின்னவனு இருந்தப்போ, 'சீவாளியைத் தொட மாட்டேன்; சீமைப் படிப்புத்தான் படிக்கப் போறேன்னு' பிடி வாதம் பிடிச்சான். இவனுடைய அப்பன் எங்கிட்டே வந்து அழுதான். இவனை என்ன பண்ணினேன் தெரியுமா அப்போ? காதைப் பிடிச்சுத் திருகி, "போய் ஒத்து ஊதுடா பயலே' என்று விரட்டி அனுப்பிச்சேன். இப்ப என்னடான்னு பிரமாதப்படுத்தறான். அகாடமியிலேகூட சான்ஸ் கொடுக்கச் சொல்லியிருக்கேன்" என்பார்.

இதற்குள் இன்னொருவர் வந்து, "இந்த வைரமோதிரம் எங்கே வாங்கினீங்க, சார்?" என்பார்.

"வாங்கறதாவது? பம்பாயிலே ஒரு டைமண்ட் மர்ச் செண்ட் கொடுத்தனுப்பிச்சான். அவனுக்கு நாய் வளக்கற திலே ஒரு மேனியா. எங்கிட்டே நாலு ஸ்பேனியல் இருந்தது. அதை யாரோ போய் அவன் காதுலே போட்டு வெச்சுட்டான் போல இருக்கு. விடுவானு அவன்? 'மை டியர் நாகசாமி' அந்த நாலு ஸ்பேனியலையும் எனக்கு அனுப்பிச்சுடு'ன்னு லெட்டர் எழுதிவிட்டான். அப்புறம் என்ன செய்யறது? அனுப்பி வெச்சேன். அவ்வளவுதான். அவன் வெரிமச் பிளீஸ்டு! உடனே ஒரு வைர மோதிரத்தை அனுப்பிச்சு கோஹினூர் டைமண்ட், ரொம்ப ரேர் ஜெம். இதை என் ஞாபகமாக உன் விரலிலே போட்டுக்கணும்னு கட்டாயப் படுத்தினன், எப்படி மறுக்கிறது?"

இதற்குள் "நேற்று உங்களை ஏரோடிரோம்லே பார்த் தாப்பலே இருக்கே?" என்று ஒருவர் ஆரம்பிப்பார்.

"என்ன சார் பண்றது? சீப் என்ஜினீர் சீதாராமய்யர் திடீர்னு பங்களூர் போகணும், ஏர் டிக்கட் ஒண்ணு புக் பண்ணிக் குடுக்க முடியுமான்னு எனக்கு போன் பண்ணினர். பங்களூரில் அவர் தாயாருக்கு ஏதோ ரொம்ப சீரியஸ்னு தந்தி வந்ததாம். யாருக்கு எது வேண்டுமானுலும்தான் நான்

ஒருத்தன் இருக்கேனே. ஒரொரு சமயம் ஏண்டா இவ்வளவு பாபுலரா இருக்கோம்னுகூடத் தோன்றது. பிளேன் புறப் படறதுக்கு அரைமணி நேரம்தான் இருக்கும். என்ஜினீயரை என் காரிலேயே அழைச்சிண்டு நேரா ஏரோட்ரோமுக்குப் போனேன். அங்கே போனல் அயர்ன் மர்ச்செண்ட் அழகிரி சாமி அதே ப்ளேன்லே பங்களூருக்குப் புறப்பட்டுண்டிருக்கான் இவன் டிக்கட்டை மாற்றி என்ஜினீயர் கிட்டே கொடுத்து நீங்க புறப்படுங்கோன்னேன். அழகிரிசாமி அர்ஜண்டாப் போகணும்னு முணுமுணுத்தான். சரிதாண்டா, எதுக்குப் போறேன்னு எனக்குத் தெரியாத மாதிரி பேசறயே. என்கூட வா. இங்கேயே வாங்கிக் கொடுக்கறேன்னு சொல்லி ஒரு பர்மிட் ஹோல்டர் வீட்டுக்கு அழைச்சிண்டு போய்த் தொலைச் சேன். அந்தப் பர்மிட் ஹோல்டர் யாருன்னு கேட்கிறீங்களா அது ஒரு கதை. பர்மிட் வாங்கறத்துக்கு அவன் என் உயிரை வாங்கி விட்டான். நான்தான் போய் ஹயர் அதாரிடீஸ்கிட்டே பேசி, மெடிகல் சர்டிபிகேட் வாங்கி, பர்மிட்டும் வாங்கிக் கொடுத்தேன். அந்த ஹயர் அதாரிட்டிக்கு எங்கிட்டே ஒரு ஆப்ளிகேஷன்.

"அவர் ஒருநாள் வந்து, 'நாகசாமி! உன்னைத்தான் மலையா நம்பிண்டிருக்கேன்' என்றார். சமாசாரத்தைச் சொல்லுங் கன்னேன்

"பெண்ணுக்குக் கலியாணம்னர். யார் மாப்பிள்ளேன் னேன். நீதான் ஒரு நல்ல மாப்பிள்ளையாப் பார்த்துக் கொடுக்கணும்னர், ரிடயர்ட் அக்கௌண்டண்ட் ஜெனரல் சோமசுந்தரம் இல்லே; அதான்ய்யா குருமூர்த்தி ஷட்டகர். அவர் பிள்ளை ஐ. ஏ. எஸ். படிச்சவன். அவனை நிச்சயம் பண்ணி வெச்சேன். அத்தோடு விட்டாரா? அப்புறம் கலியாணத்தை நடத்தறதுக்கு இடம் வேணும்னர். அப்பட்ஸ்பரியிலே ஏற்பாடு பண்ணினேன். அப்புறம் நாதசுரம், சங்கீதக் கச்சேரி எல்லா ஏற்பாடும் நீதான் கவனிச்சுக்கணும் நாகசாமின் னுட்டார்.

கடைசிலே பாரு! ஒரு சின்ன விஷயம் தொந்தரவாப் போச்சு. லௌட் ஸ்பீக்கருக்குப் போலீஸ் லைசென்ஸ் வாங் கல்லே. நான் உடனே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போன் பண்ணினேன். அந்த ஸப் இன்ஸ்பெக்டர் எனக்குத் தெரிஞ் சவன். விஷயத்தை அவன்கிட்டே சொல்லி லைசென்ஸ் வேணும்னேன். 'பணம் கட்டணும்;'ஒரு வாரத்துக்கு முன்னாலே அப்ளிகேஷன் போடணும் அது இது'ன்னான். இத பாரு, எனக்கு அதெல்லாம் தெரியாது: இன்னைக்கே லைசென்ஸ் வேணும் முதல்லே லைசென்ஸை அனுப்பி வை. அப்புறம் மற்ற விஷயங்களை பாத்துக்கலாம்'னேன். அவ்வளவுதான்; லைசென்ஸ் கதறிண்டு வந்துட்டுது. ஏன்? சும்மாவா? அந்த ஸப் இன்ஸ்பெக்டருக்குப் பிரமோஷனுக்கு ஐ.ஜி. கிட்டே இந்த நாகசாமிதானே ரெகமண்ட் பண்ணி ஆகணும்?"

இந்தச் சமயம் யாரோ ஒருவர் வந்து நாகசாமியைக் கூப்பிட்டார்.

"சரி; ஈஜிப்ட்லேருந்து காட்டன் மர்ச்செண்ட்ஸ் சிலபேர் வராங்களாம். நான் போயிட்டு வரேன். இந்த நாகசாமியைக் கொஞ்ச நேரம் நிம்மதியா இருக்க விடுவாளா, என்ன?...உம், காரை எடுக்கச் சொல்லு" என்றார்.

# 'கமிஷன்' குப்பண்ணு

"குப்பண்ணுவை யாராவது பார்த்தீர்களா, சார்! ஆளே அகப்பட மாட்டேங்கிறுனே?"

"எந்தக் குப்பண்ணு? கமிஷன் குப்பண்ணுவா? இத்தனை நேரம் இங்கேதானே இருந்தான்? இப்பத்தான் யாரோ ஒருவர் வந்து அவனைக் காரில் அழைத்துக்கொண்டு போனுர்."

குப்பண்ணுவைத் தேடிக்கொண்டு தினமும் ஆயிரம் பேர் அலைவார்கள். அவனோ ஆயிரம் இடத்தில் சுற்றிக் கொண் டிருப்பான்.

"என்ன சார் பண்றது? சப்ஜட்ஜ் வீட்டிலே கல்யாணம். வக்கீல் வீட்டுப் பையனுக்குக் காலேஜ் அட்மிஷன்; இன்னொருத்தருக்கு வீடு வேணும்; வேருெருத்தருக்குக் கார்ப்பரேஷன் லைசென்ஸ்; எல்லாத்துக்கும் இந்தக் குப்பண்ணு தான்; முடியாதுன்னு யார் விடறு?" என்பான் குப்பண்ணு.

இந்தச் சமயம், "குப்பண்ணு! உன்னைத்தான் தேடிக் கொண்டிருக்கிறேன்!" என்று சொல்லிக்கொண்டு வருவார் ஓர் ஆசாமி.

"என்ன சங்கதி, ரிஸ்ட் வாட்ச் விஷயந்தானே? வாங்க, இந்த ஓட்டலுக்குள்ளே போய்க் காப்பி சாப்பிட்டுக் கொண்டே பேசுவோம்" என்று அவரை ஓட்டலுக்குள் அழைத்துச் சென்று, "எங்கே கடியாரத்தைக் காட்டுங்க,

பார்க்கலாம்? எத்தனை ஜ்வல்ஸ்? பழசுமாதிரி இருக்கே? என்ன விலை?'' என்பான்.

''என்ன, குப்பண்ணு! புது வாட்ச் இது! பார்த்தால் தெரியல்லே? சிங்கப்பூர்லேருந்து வந்தது. போன மாசந்தான் வாங்கினேன். இருநூற்று எழுபது ரூபாய்'' என்பார் அவர்.

''அடாடா! ஏமாந்துட்டேளே சார்! என்கிட்டே சொல்லி யிருந்தா இதே வாச்சை இருநூற்றுமுப்பது ரூபாய்க்கு வாங்கிக் கொடுத்திருப்பேனே! சரி, போறது. இப்ப யார் சார் வாங்கப் போறு? இருநூறு ரூபாய்க்குத் தருவதானால் சொல்லுங்க. ஓர் இடத்திலே கேட்டுப் பார்க்கறேன். அதுவும் உங்களுக்கு அதிருஷ்டம் இருந்தால் விலை போகும்.''

''அப்படியெல்லாம் சொல்லக் கூடாது, குப்பண்ணு, உன்கிட்டே வந்தா காரியம் நடக்கும்னுதானே காலையி லேருந்து அலையறேன்.''

''சரி. வாச்சைக் கொடுங்க. சரியா மூணு மணிக்கு என்னைப் பஸ் ஸ்டாண்ட்லே வந்து பாருங்க'' என்று கடி காரத்தை வாங்கிக்கொள்வான். இதற்குள் இன்னொரு ஆசாமி அவனைத் தேடிக்கொண்டு வருவார். ''என்ன குப்பண்ணு! உன்னை எங்கெல்லாம் தேடறது? காலையிலே எட்டு மணிக்கு என்னைப் போஸ்டாபீஸ் வாசல்லே வந்து காத்துண்டிருக்கச் சொல்லிட்டு நீபாட்டுக்கு வராமலேயே இருந்துட்டயே! காத்துக் காத்து எனக்குக் காலே வலியெடுத்துப் போச்சு. சரி, நான் சொன்ன விஷயம் என்ன ஆச்சு?'' என்று கேட்பார்.

அவ்வளவுதான். ரிஸ்ட் வாச் ஆசாமியை அப்படியே நடுத் தெருவில் விட்டுவிட்டுப் புதிதாக வந்தவருடன் அவன் போய்விடுவான்.

''உன்னை நம்பி முகூர்த்தத்தை வெச்சுண்டுட்டேன். இன்னும் ஒரு வேலையும் ஆகல்லே; நாளோ ஓடிண்டிருக்குது. நீயோ அதுக்கு மேலே ஓடிண்டு இருக்கே. கலியாணத்துக்குச் சத்திரம் பிடிச்சுத் தரேன்னே. கச்சேரிக்கு ஏற்பாடு

பண்றேன்னு சொன்னே. 'பந்தல்காரன், மேளக்காரன், பால்காரன், சமையல்காரன் எல்லாம் என் பொறுப்பு; நீங்க ஒண்ணுக்கும் கவலைப்படாதீங்கோ'ன்னே?"

"நீங்க ஒண்ணுக்கும் கவலைப்படாதீங்க! இதோ, இப்பவே போய்ச் சத்திரத்தை 'பிக்ஸ்' பண்ணிடறேன். கச்சேரிக்கு ஏற்பாடு பண்ணிடறேன். பால்காரன், சமையல்காரன், மேளக்காரனுக்கெல்லாம் அட்வான்ஸ் கொடுத்துட்டு வந்துடறேன். போதுமா? அவ்வளவுதானே? அப்புறம் என்ன? இன்னொரு சின்ன விஷயம்: மாப்பிள்ளைக்கு ரிஸ்ட்வாட்சு போடணும்னு சொல்லிண்டிருந்தீங்களே, ஒரு இடத்திலே பஸ்ட் கிளாஸ் சிங்கப்பூர் வாச் இருக்குது. வேணுமா? விலை ரொம்ப மலிவு. அவன் முந்நூறு ரூபாய் சொல்றான். வேணுமானு சொல்லுங்க. இருநூற்றைம்பதுக்கு முடிச்சுத் தரேன். முந்திக்காட்டாப் போயிடும்..." என்றெல்லாம் கூறி, அந்தக் கடியாரத்தை இருநூற்றைம்பதுக்கு அவர் தலையில் கட்டிவிட்டு, வாச்சின் சொந்தக்காரரிடம் இருநூற்று நாற்பதுக்குத் தான் விலை போயிற்று என்று கூறுவான். இதைத் தவிர, இரண்டு பேரிடமும் கமிஷன் வேறு தட்டிவிடுவான்.

"என்ன குப்பண்ணு, உன்னைப் பாக்கிறதே அபூர்வமாய்ப் போச்சே?"

"இன்னும் நாலு நாளைக்கு ஒண்ணும் பேசாதீங்க, அண்ணு! வக்கீல் சேஷாத்திரி வீட்டிலே கல்யாணம். மூச்சு விட நேரமில்லே. தேங்காய் வாங்கி வரக் கொத்தவால் சாவடிக்குப் போயிண்டிருக்கேன்."

"எங்க வீட்டுக் கலியாணத்திலே ஆயிரம் தேங்காய் மிஞ்சிப் போயிடுத்தே, அதை வித்துக் கொடுன்னு சொல்லியிருந்தேனே. மறந்துட்டியா?"

"வக்கீல் வீட்டிலே பெரிய காயா இருக்கணும்னு சொன்னு, அதனலே யோசிக்கிறேன். சரி, எதுக்கும் என்ன விலைன்னு சொல்லுங்க?"

“நூறு பதினைஞ்சு ரூபாய்ன்னு போட்டுண்டு தள்ளி விடுடா; உனக்கும் கொஞ்சம் கமிஷன் தரேன்!”

“கமிஷனா? உங்ககிட்டே அதெல்லாம் வாங்குவேனா? அவர் என்ன விலை கொடுக்கிறாரோ, அதை அப்படியே வாங்கிக் கொடுத்துடறேன். எனக்கெதுக்கு, கமிஷனும் கிமிஷனும்?”

ஆனால், வக்கீல் வீட்டில் நூறு பதினெட்டு என்று விலை சொல்லி, ஆயிரம் காய்களையும் தள்ளிவிடுவான். தேங்காய் கொடுத்தவரிடம் பதினாலு ரூபாய் என்று சொல்லி அதில் ஒரு ரூபாய் பார்த்துக்கொள்வான். கடைசியில் வக்கீல் வீட்டுக் கலியாணத்தில் மிஞ்சிய தேங்காய்களை வேறொரு கலியாண வீட்டில் கொண்டுபோய் விற்று, அதிலும் பத்து ரூபாய் கமிஷன் பார்த்துக்கொள்வான்.

“ஏண்டா குப்பண்ணா! இப்படியே எத்தனை நாளைக்குத் தான் காலம் தள்ளப் போகிறாய்? ஏதாவது சொந்த வியாபாரம் ஆரம்பிக்கக் கூடாதோ?” என்று யாராவது கேட்டால், “எனக்கு எதுக்கண்ணா அதெல்லாம்? நாலு பேருக்கு உபகாரம் பண்றதிலே இருக்கிற சந்தோஷம் வேறெதிலே உண்டு?” என்பான். ஆனால், அவன் புது வியாபாரம் ஆரம்பிக்காததற்குக் காரணம் அதுவல்ல; தன்னுடைய வியாபாரத்தில் வேறு எவனாவது கமிஷன் அடித்துவிடப் போகிறானே என்பது தான் அவனுக்குள்ள பயம்!

---



## ஆசிரியர் சாவியின் நூல்கள்

வாஷிங்டனில் திருமணம்
விசிறி வாழை
வழிப்போக்கன்
வடம் பிடிக்க வாங்க, ஜப்பானுக்கு
வேதவித்து
கேரக்டர்
பழைய கணக்கு
இங்கே போயிருக்கிறீர்களா?
ஊரார்
திருக்குறள் கதைகள்
கோமகனின் காதல்
தாய்லாந்து
உலகம் சுற்றிய மூவர்
என்னுரை (கலைஞரின் முன்னுரையுடன்)
சாவியின் கட்டுரைகள்
சாவியின் நகைச்சுவைக்கதைகள்
ஆப்பிள் பசி
நான் கண்ட நாலு நாடுகள்
நவகாளி யாத்திரை
சிவகாமியின் செல்வன்

சாவி பப்ளிகேஷன்ஸ்
8-A, 7வது பிரதான சாலை
ராஜா அண்ணாமலைபுரம், சென்னை-28